# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



அண்ணா 100

KALKI • 20.09.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



விருது ராஜ்!



"அவள் அப்படியொன்றும் அழகில்லை!"

இயக்குநர் வசந்தபாலன்

# ஸ்ரீ மாதா டிரஸ்ட்

**(ஜாதி, மத, இன சார்பு அற்ற ஏழை புற்று நோயாளிகளுக்கு புகலிடம் தரும் தொண்டு நிறுவனம்)**



**ஸ்ரீ மாதா டிரஸ்ட்** என்ற இந்த தொண்டு நிறுவனம், **ஸ்ரீ காஞ்சிபெரியவர்களின்** அருளாசியுடன் திருமலை "பாலாஜி" தெய்வ சன்னிதானத்தில் ஜகத்குருவின் அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமான பக்தர் IOC Krishnamoorthy அவர்களை ஸ்தாபகராக நியமனம் செய்து ஆரம்பிக்கப்பட்டது.

அதிக துன்பத்திற்கு ஆளாகும் "புற்று நோயாளிகளில்" மிகவும் ஏழ்மை நிலையில் இருப்பவர்களைப் பாதுகாக்கும் நோக்கத்தோடு பாடுபட்டு வரும் அடையாறு கேன்சர் இன்ஸ்டிட்யூட், ராஜஸ்தானி அசோசியேஷன் (தமிழ்நாடு)ன் பண உதவியால் இந்த நோயாளி களுக்கான காப்பகத்தை கட்டி பயன்பாட்டுக்கு கொண்டு வந்தார்கள்.

இந்த ஸ்தாபனம் ஸ்ரீ காஞ்சி பெரியவர்கள் ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள் அவர் களுக்கு விடுத்த வேண்டுகோளுக்கு இணங்கி, "ஸ்ரீ மாதா டிரஸ்ட்" இந்த தர்மசாலாவை பராமரிக்கும் மிகப்பெரிய பொறுப்பை ஆகஸ்டு மாதம் 2000ம் ஆண்டு ஏற்றுக்கொண்டது. அன்றிலிருந்து இன்று வரை எந்தவித தொய்வும் இன்றி, பொதுமக்கள் - நல்ல உள்ளங்கள் அளித்து வரும் நன்கொடைகளின் உதவியின் பலனாக, பல மாகாணங்களிலிருந்து சென்னை அடையாறு புற்று நோய் மருத்துவமனைக்கு புறநோயாளிகளாக வரும் பல் லாயிரக்கணக்கான ஏழைகளுக்கும் உடன் வரும் அவர்களது ஒரு உதவியாளருக்கும் இலவசமாக உணவும், இருக்க இடமும் கொடுத்து காப்பாற்றி வருகிறது இந்த ஸ்ரீ மாதா டிரஸ்ட்.






இந்த மனிதநேய திருப்பணிக்கு உதவுமாறு நிருபர்கள் கூட்டத்தில் ஸ்ரீ ஆச்சார்யாள் உரையாற்றுகிறார் உடன் ஸ்ரீ மாதா டிரஸ்ட் நிறுவனர் திரு.கிருஷ்ணமூர்த்தி (IOC)



ஏழை புற்றுநோயாளிகளுக்கு ஜகத்குரு தரிசனம்

## தர்மசாலாவிற்கு விஜயம் செய்த அன்பர்களின் எண்ணங்கள்...!

*திரு. கிருஷ்ணமூர்த்தி தன் **"குருஅருளால்"** மதிப்புமிக்க சமுதாயப்பணியை செய்துவருகிறார் உண்மையிலேயே இது மிகச்சிறந்த பணி.*

**என்.ராமசர்மா**
மேனேஜர், ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம், காஞ்சிபுரம்

*ஒரு தாய் தன் கருவறையில் தன் குழந்தையை எப்படி பாதுகாக்கின்றாளோ, அதேபோல் இங்கு நோயாளிகளை ஒரு தாயைப்போல நேசிக்கிறார்கள்.*

**என்.சுப்பையா**
சென்னை-6.

## வி.கிருஷ்ணமூர்த்தி

நிர்வாக அலுவலகம்:
"குரு கிருபா", 3, சாஸ்தா அவென்யூ,
திருமழிசை தெரு, சந்தாம் காலனி,
கிழக்கு தாம்பரம், சென்னை - 600 059.



நிறுவனர் மற்றும் நிர்வாக அறங்காவலர்
கைபேசி: 94440 01065
ராஜஸ்தானி தர்மசாலா,
பழைய கேன்சர் இன்ஸ்டிட்யூட் வளாகம்,
ஈஸ்ட் கனால் பேங்க் ரோடு, காந்தி நகர்,
அடையாறு, சென்னை - 600 020.
Phone: 2442 0727 / 2440 4950

"புற்று நோயினால்" கஷ்டப்படும் ஏழை நோயாளிகள், மன அமைதியுடன் இருக்க இடமும் உண்ண உணவும் அளிக்கும் "தர்மசாலாவை" நிர்வகிக்கும் "ஸ்ரீ மாதா டிரஸ்ட்" தன் மனித நேய திருப்பணியில் கடந்த 9 ஆண்டுகளில் 1,40,000த்திற்கு மேற்பட்டவர்களுக்கு உதவி செய்த மன நிறைவோடு 10வது ஆண்டில் அடியெடுத்து வைக்கும் இந்த நன்னாளில், அன்பு உள்ளங்களுக்கு ஒரு பணிவான வேண்டுகோள் !!

நோயாளிகள் தங்கும் வசதியான அறை


சௌகரியம் மிகுந்த உணவு அறை

# சற்று அசந்தால் வாழ்க்கையையே பறித்து விடுவதுபோல் பயம் காட்டுகிற புற்றுநோய்

கேன்சருக்கு ஏழை பணக்காரன்கிற பாகுபாடு எல்லாம் கிடையாது. ஒருபக்கம் உயிரைத் துளைக்கிற வலி. இன்னொரு பக்கம் வாழ்க்கையே முடிஞ்சுடுமோங்கிற பயம். கையில் காசு இருக்கிறவங்களுக்கு இந்த வேதனை மட்டும்தான். ஆனால் தினசரி கூலி வேலை செஞ்சு, வயிற்றைக் கழுவ வேண்டிய ஏழைகளுக்கு? வேலைக்குப் போறதை எல்லாம் அப்படியே நிறுத்திட்டு கேன்சருக்கு சிகிச்சை எடுக்க வேண்டிய கட்டாயம். வேலைக்குப் போக முடியாததால் குடும்பச் செலவுகளுக்குத் திணற வேண்டிய அவலம். இப்படி மரண வேதனைப்படுகின்ற பரமஏழைகளின் கஷ்டத்திற்கு இறைவன் அருளால் நல்ல நிலைமையில் இருக்கும் நாம், ஏதாவது நிவாரணம் அளிக்க வேண்டாமா?

யாருடைய உடல் வலியையும் வியாதியின் கொடுமையையும் மற்றவர்கள் பகிர்ந்துகொள்ள முடியாது. இருப்பினும் குறைந்த பட்சம், மனிதநேய அடிப்படையில் அவர்களைப் பேணி பராமரிக்கும் "ஸ்ரீமாதா டிரஸ்ட்" நடத்தி வரும் தர்மசாலாவிற்கு பொருள் உதவி செய்வதன் மூலம் அங்கு தங்கியிருக்கும் ஏழை புற்றுநோயாளிகளுக்கு இலவசமாக உணவு கொடுத்து அவர்களது நோய்க்கு இலவச சிகிச்சை பெற உதவலாமே?

புற்றுநோயால் அவதியுறும் ஏழைகள் வாழ்க்கையே ஒரு கேள்விக்குறியாகிறது

"புற்றுநோய்" - சரியான நேரத்தில் முறையான சிகிச்சை அளித்தால் நிச்சயம் குணப்படுத்தலாம்



புற்றுநோயால் அவதியுறும் ஏழைகள் குணமாக உதவி செய்ய, எங்களுக்கு உதவுங்கள்

**நீங்கள் எங்கள் தர்மசாலாவிற்கு விஜயம் செய்து நேரில் பார்த்த பிறகு உங்கள் உதவிகளை இப்படி அளிக்கலாமே ...**

- ஒரு நாளைக்கு ஒரு நோயாளியின் உணவுக்காக ரூ.80 அளிக்கலாம்.
- ஒவ்வொரு மாதமும் ஒரு நோயாளி என்ற அடிப்படையில் ஆண்டு முழுவதற்கும் ரூ.1000 அளிக்கலாம்.
- இந்த தர்மசாலாவில் தங்கும் 250 முதல் 300 வரை உள்ள நோயாளிகளுக்கு ஒரு நாள் சாப்பாடு செலவான ரூ.8000 அளிக்கலாம்.
- ஏழை நோயாளிகளுக்கு மதிய உணவு அல்லது இரவு உணவு அளிக்க ரூ.3000 வழங்கலாம்.
- காலை சிற்றுண்டி மட்டும் கொடுக்க ரூ.2000 வழங்கலாம்.
- காலை முதல் இரவு வரை முழு நாள் உணவை ஆண்டுக்கு ஒரு முறை உங்கள் சார்பாக வழங்க ரூ.75000 கொடுத்து நீங்கள் ஒரு "வள்ளல்" ஆகலாம். நீங்கள் கொடுக்கும் இந்த தொகை டிரஸ்டின் காப்பு நிதியில் சேர்க்கப்பட்டு, அதன் வட்டியிலிருந்து இந்த தர்மம் செய்யப்படும்.
- பெரிய மனதுடன் ரூ.100000 கொடுத்து நீங்கள் இந்த புனித சேவையின் ஒரு நிரந்தர காப்பாளர் ஆகலாம்.

நீங்கள் அளிக்கும் நன்கொடையை, "SRI MATHA TRUST" என்ற பெயரில் காசோலையாக அனுப்பி வைக்கலாம். நீங்கள் அளிக்கும் நன்கொடைக்கு 80(G) பிரிவின்படி வருமான வரிவிலக்கு உண்டு



# காலையில் காமெடி... மாலையில் சீரியஸ்...

'**க**ந்தசாமி' படத்தின் எல்லாப் பாடல்களும் சூப்பர் டூப்பர் ஹிட் ஆனதில் ஏகத்துக்கும் சந்தோஷத்தில் இருக்கிறார் கவிஞர் விவேகா. இவர் பாடல்கள் எழுதி வெளிவரவிருக்கும் படங்களின் எண்ணிக்கை இருபத்தைந்தைத் தாண்டுமாம். ''கமர்ஷியலையும் கவிதையையும் கைகுலுக்க வைத்தால் வெற்றிக்கனி நம் மடியில் விழும். இதுதான் நான் பாடல் எழுதும் ரகசியம்'' என்கிறார் விவேகா.

*(ரகசியத்தைப் பொட்டுன்னு போட்டு உடைச்சுட்டீங்களே!)*

**கொ**ஞ்ச நாளைக்கு எந்தப் படமும் வேண்டாம் என்று இயக்கத்தைத் தள்ளி வைத்திருந்த இயக்குநர் ஜோதி கிருஷ்ணா. இப்போது 'ஊலலலா' படத்தை இயக்குவதோடு ஹீரோவாக நடிக்கவும் செய்கிறார். ஸ்ரேயா, இலியானா, தமன்னா வரிசையில் அடுத்து அவர் அறிமுகப்படுத்தும் ஹீரோயின் ப்ர்த்தி பண்டாரி.

*(ஸ்ரேயாவை நீங்கதான் அறிமுகப் படுத்தினீங்களா...? நன்றி ஸார்!)*

**ஜெ**மினி படத்தில் 'ஓ போடு' பாட்டின் மூலம் ஓகோவென உச்சத்துக்குப் போனவர் ராணி. ஹைதராபாத் பூர்வீகம். 'ஊலலலா' படத்தின் மூலம் அம்மாவாக ரீ என்ட்ரி ஆகிறார். ஏன் அம்மா ரோல்ல நடிக்கறீங்கன்னு கேட்டா 'ச்சும்மா' என்கிறார்!

*(அம்மா... ச்சும்மா... அடடா என்ன ஒரு ரைமிங்!)*

**கா**லையில் காமெடி... ஈவ்னிங் சீரியஸ்... என்னன்னு கேட்கறீங்களா...? 'சிங்கம் புலி' படத்துல ஜீவாவோட கேரக்டர் இது! ரெட்டை வேடத்துல பட்டையைக் கிளப்பிக்கிட்டு இருக்காராம். தயாரிப்பாளர் எஸ்.எஸ். வாசன், ''எங்களுக்கு 'சிங்கம்புலி'தான் முதல் படம். அதுக்குப் பிரச்னை பண்ணாத ஹீரோ கிடைச்சது பேரதிர்ஷ்டம்'' என்று புல்லரிக்க வைத்திருக்கிறார்.

*(ஜீவா... நல்லா சொறிஞ்சுக்கங்க... ஆமா...)*

**அ**ர்ஜுன் நடிக்கும் 'மாசி' படம் ஒரே ஷெட்யூலில் படமாக்கப்பட்டிருக்கிறது. இடைவெளியே இல்லாமல் 60 நாட்கள் படப்பிடிப்பு நடந்திருக்கிறது. 'என் திரையுலக வாழ்க்கையில் இது புது அனுபவம்'

**நியூஸ் பாய்**

என்கிறார் அர்ஜுன்!

*(அதனால என்ன பண்றது, கையில வேற படம் இல்ல... அனுபவம் பேசுது!)*

இயக்குநர், தயாரிப்பாளர் முக்தா சீனிவாசனின் இன்னொரு முகம் இலக்கியவாதி. தம் வீட்டின் கீழே லைப்ரரி ஒன்றை ஆரம்பித்திருக்கிறார். ''யாரேனும் புத்தகம் அன்பளிப்பாக அளிக்க விரும்பினால் என்னைத் தொடர்பு கொள்ளலாம்'' என்கிறார் முக்தா.

*(முக்தா... நீங்க புத்தக 'பக்தா'... ஹீ...ஹீ...)*

சினேகா ஆக்ஷன் கோதாவில் குதித்திருக்கும் 'பவானி' படம் தமிழ், தெலுங்கு என இரண்டு மொழிகளிலும் தயாராகி எதிர்பார்ப்பை ஏற்றிவிட்டிருக்கிறது. ''நிச்சயம் ஹீரோக்களின் படங்களுக்கு நிகராக 'பவானி' பிஸினஸ் ஆகும்'' என்கிறார் கிச்சா.

*(ஹீரோ, ஹீரோயின்ஸ் இடையில ஃபைட் ஸீன் ஆகிடாம பார்த்துக்குங்க...)*

# அறிவிப்பு

**தவிர்க்கமுடியாத காரணங்களால்
இவ்வாண்டு
கல்கி தீபாவளி மலர்
வெளியீடு ரத்தாகியிருக்கிறது.
இதன் விளைவாக வாசகர்கள்,
விளம்பரதாரர்கள், முகவர்களுக்கு
ஏற்பட்டுள்ள சிரமத்துக்கு
மிகவும் வருந்துகிறோம்.**

**- கல்கி நிர்வாகம்**




**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

ஆசிரியர் : **சீதா ரவி**
உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**
வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்**
தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

இதழில் வெளியாகும் விளம்பரங்களின்
உண்மைத் தன்மைக்கு
கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

"இதுவரை பல பாக்ஸ் ஆபீஸ் ஹிட் படங்களைக் கொடுத்திருக்கிறேன். என் படத்தில் பணியாற்றியதற்காக தேசிய அளவில் பல கலைஞர்களுக்கு விருதுகள் கிடைத்திருக்கின்றன. கஞ்சிவரம் படத்துக்கு விருது கிடைத்திருப்பதில் எனக்கு மகிழ்ச்சியோ மகிழ்ச்சி! காரணம் பல வருடங்களாக என் மனத்தின் ஆழத்தில் ஊறிக்கிடந்த கதை அது. அதைப் படமாக எடுத்தவுடன், பல திரைப்பட விழாக்களில் திரையிடப்பட்டுப் பாராட்டைப் பெற்றது. கமர்ஷியல் ஹிட்களை மட்டுமல்ல கலைப்படங்களையும் என்னால் கொடுக்க முடியும் என்பதை கஞ்சிவரம் படத்தின் மூலம் நிரூபித்திருக்கிறேன்'' என்கிறார் சிறந்த திரைப்படத்துக்கான தேசிய விருது பெற்றுள்ள கஞ்சிவரம் தமிழ்ப் படத்தின் தயாரிப்பாளர், இயக்குநரான பிரியதர்ஷன்.

''மோகன்லால் நடிப்பதாக இருந்தது. அவரால் எனக்குச் சௌகரியமாக கால்ஷீட் தர முடியவில்லை. மேலும், தமிழ்ப்படம் என்பதால் பிரகாஷ்ராஜ் இன்னும் பொருத்தமாக இருப்பார் என்று தோன்றவே, அவரைக் கேட்டேன். மகிழ்ச்சியுடன் சம்மதித்தார். முதல் பிரதி ரெடியானதும் இருவருமாகச் சேர்ந்து படம் பார்த்தபோதே உங்களுக்கு விருது நிச்சயம் என்று சொன்னேன்'' என்கிறார் பிரியதர்ஷன்.

"ஒரு நாள் டைரக்டர் பிரியதர்ஷன் எனக்கு ஃபோன் செய்து, 'பன்னிரண்டு வருஷங்களாக எனக்குள்ளே இருக்கும் ஒரு கதையை வைத்து ஒரு தமிழ்ப்படம் எடுக்க விரும்புகிறேன். பல்வேறு காலகட்டங்களிலும் ஒவ்வொரு நடிகரை வைத்து எடுக்கத் திட்டமிட்டேன். அது நடக்காமல் போனது. இப்போது கஞ்சிவரம் என்ற அந்தப் படத்தில் நீங்கள் நடிக்க வேண்டும். உங்களால் நடிக்க முடியாத பட்சத்தில், அந்தப் படமெடுக்கும் எண்ணத்தையே விட்டுவிடுவேன்' என்று சொன்னார். உடனே, பிரியதர்ஷனை நேரில் சந்தித்தேன். கதையைக் கேட்டுவிட்டு உடனடியாக எதுவும் சொல்லாமல் நான் கிளம்பிவிட்டேன்.

'என்னுடைய இமேஜுக்கு ஒத்து வராது' என்று நான் சொல்லிவிடுவேன்



என்று ப்ரியன் எதிர்பார்த்திருக்கிறார். ஆனால் நிஜமான காரணம் அந்தக் கதையைக் கேட்டுவிட்டு நான் ஆடிப்போய் விட்டேன். என்னால் மேற்கொண்டு எதுவும் பேச முடியவில்லை. திரும்ப வரும் வழியில் ஒரு ஹோட்டலில் காஃபி சாப்பிட்டுவிட்டு, சகஜ நிலைக்குத் திரும்பிய பிறகு ப்ரியனுக்கு ஃபோன் செய்தேன். இந்த மாதிரியான ஒரு படத்தில் நடிக்க என்னைத் தேர்ந்தெடுத்ததே எனக்குக் கிடைத்த ஒரு பெரிய கௌரவமாக நான் நினைக்கிறேன். கண்டிப்பாக இந்தப் படத்தில் நான் நடிக்கிறேன் என்று சொன்னபோது அவருக்கு இன்ப அதிர்ச்சி'' என்கிறார் பிரகாஷ்ராஜ்.

''காஞ்சிவரம் ஏதோ ஒரு சின்ன பட்ஜெட் சினிமா அல்ல. ப்ரியன் இன்று ஹிந்தியில் ஒரு முன்னணி டைரக்டர். கேமராமேன் திரு, ஆர்ட் டைரக்டர் சாபு சிரில், பிரகாஷ் என்கிற நடிகன் எல்லோருமே முக்கியமானவர்கள். நாங்கள் அனைவரும் சேர்ந்து இப்படி ஒரு படம் பண்ணுகிறோம் என்றால் அதற்கு நல்ல சினிமா மீது உள்ள வெறித்தமான ஆர்வம் மட்டுமே காரணம்.

இந்தப் படத்துக்கு ஏற்கெனவே பல உலகப்பட விழாக்களில் பாராட்டுக்களும், விருதுகளும் கிடைத்துவிட்டன. இப்போது தேசிய விருது கொடுத்திருக்கிறார்கள். 'காஞ்சிவரத்துக்காக எனக்குக் கிடைக்க வேண்டிய அங்கீகாரங்கள் ஏற்கெனவே கிடைத்துவிட்டதாகத்தான் நான் நினைக்கிறேன். இதற்கு முன்பு மூன்று முறை நேஷனல் அவார்டு வாங்கியிருக்கிறேன் என்றாலும்கூட அவை எல்லாம் அந்தந்த ஆண்டுகளில் வெளியான படங்களுக்குள் சிறந்த நடிப்பு என்பதற்காகத்தான் தரப்பட்டன. ஆனால் ஒரு நடிகன் சிறந்த நடிகன் என்பதைத் தொடர்ந்து நிரூபித்துக்கொண்டே இருக்க வேண்டும். சிவாஜி, நாகேஷ், எஸ்.வி. ரங்காராவ் போன்றவர்கள் எல்லாம் நாற்பது வருடங்களுக்கு மேலாக தொடர்ந்து தங்களை யார் என்று நிரூபித்தார்கள். கமல்ஹாசனும், ரஜினி காந்தும் நாற்பது வருடங்களுக்கு மேலாகத் தங்களை நிரூபித்துக் கொண்டிருக்கிறார்கள். அதை பத்துப் பதினைந்து ஆண்டுகளில் பிரகாஷ்ராஜ் செய்வது சாத்தியமில்லையே! என்னுடைய திறமையை வெளிப்படுத்திய 'இருவர்', 'மொழி', 'அபியும் நானும்' படவரிசையில் காஞ்சிவரத்துக்கும் ஒரு இடமுண்டு'' என்கிறார் பிரகாஷ்ராஜ்.

- மானஸா





# தமிழக நீதி அமைச்சர் க. அன்பழகன்

**1940** முதல் தமிழ் நாட்டில் திராவிடர் கழக வளர்ச்சிக்கும் சுயமரியாதைக் கொள்கையைப் பரப்புவதற்கும், தஞ்சை மாவட்டத்துக்கு அடுத்து சிதம்பரம் பகுதி ஒரு குறிப்பிடத்தக்க இடமாக இருந்தது. பல்கலைக்கழக மாணவர்களில் கணிசமான பிரிவினர் இந்தித் திணிப்பை எதிர்ப்பதிலும் சுயமரியாதைக் கொள்கையைப் பரப்புவதிலும் ஆர்வம் காட்டி வந்தனர். அண்ணா அவர்களுக்கு சிதம்பரத்தில் பேசுவதிலும், நிகழ்ச்சிகள் அமைக்கச் சொல்வதிலும் தனி மகிழ்ச்சி.

எந்த அவையில் உரையாற்றினாலும் தமது அடக்கம் புலப்பட, அவையோர் மதிப்பு மேம்பட, மாற்றார் உள்ளம் தமது கருத்துகளில் சிலவற்றையேனும் ஏற்றுக் கொள்ளும் வகையில், கொண்ட கொள்கையில் உறுதியுடன் உரையாற்றுவதே அண்ணாவின் அரிய திறமை. பயனில சொல்லாமை அவரது பக்குவம் என்றால், கடுஞ்சொல் கலவாமை பண்பாடு. சூழ்நிலையால் ஆத்திரப்பட்டு ஒரு நாளும் அவர் பொறுமை இழந்ததில்லை. தமது உரையைக் கேட்பவர் உணர்ச்சிவசப்படினும், தாம் அதற்கு அடிமைப்பட்டு விடாது பொங்கும் உணர்ச்சிக்கு அணை கட்டி மக்களை மெய்மறக்கச் செய்வதே அவரது ஆற்றல். தமது நீண்ட உரையில் மக்கள் சோர்வடையாமல் இருக்க, இடையிடையே நகைச்சுவைக் கதைகளைக் கூறி, தமது கருத்துக்களுக்கு மெருகூட்டுவது அவரது சிறப்பு. எனவே, அவரது பேச்சை அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் படித்துக்கொண்டிருந்த மாணவர்களான நாங்கள் அடிக்கடி கேட்க விரும்பியதில் ஆச்சர்யமில்லை. நான், நாவலர், மதியழகன்... ஆகியோர் அண்ணா அவர்களை பல்கலைக்கழகத்துக்கு அழைத்துப் பேச வைக்க பெருமுயற்சி எடுத்துக் கொண்டோம். ஆனால், சிலர் அதற்கு எதிர்ப்பு தெரிவித்து வந்தனர். சுமார் ஒரு மாத காலம் முயற்சி செய்து, அந்த எதிர்ப்புகளைச் சமாளித்து, அண்ணாவை அழைத்தோம்.

''பல்கலைக்கழகத்தில் பேசித்தான் என் கருத்தை மாணவர்கள் புரிந்துகொள்ள வேண்டும் என்ற அவசியமில்லை. நான் வெளியில் பேசினாலும் ஆர்வம் உள்ள மாணவர்கள் வந்து கேட்கலாமே'' என்றார் அந்தப் பெருந்தகை. பிறகு என் வற்புறுத்தலுக்கு இணங்க பேசினார் அண்ணா. அன்று அவர் 'ஆற்றோரம்' என்ற தலைப்பில் பேசியது வரலாற்றுச் சிறப்புடைய பேச்சாக அமைந்துவிட்டது.

தன்னைக் கடித்து கடுஞ்சொல் வீசியவரையும் இழித்து ஏசியவரையும்கூட அண்ணா அதே முறையில் கண்டித்ததில்லை. கடுஞ்சொற்களால் திருப்பித் தாக்குவது பயனற்ற வேலை என்பதும், கடுசொற்களைத் தாங்கிக் கொள்ளுதலே தமது

கடமை என்பதும் அண்ணாவின் வழி. இப்படித்தான் பெரியார், அண்ணாவையும் கழகத்தவர்களையும் கடுமையாகத் தாக்கிப் பேசி வந்தார். சில தோழர்கள் பெரியாருக்குப் பதிலடி கொடுக்கப் போவதாகக் கூறினார்கள். அதைக் கேட்ட அண்ணா, ''பெரியார் எவ்வளவு கண்டித்தாலும் நான் வருத்தமடைய மாட்டேன். அவர் என்னை எவ்வளவோ வாழ்த்தியிருக்கிறார். அதில் இந்த வசைகளைக் கழித்துக்கொண்டு பார்த்தால் வாழ்த்துகளே மிஞ்சும்'' என்றார். இதேபோல புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அண்ணாவைக் கடுமையாகப் பேசுவதாகச் சொன்னபோது, ''கவிஞர்கள் கோபம் வந்தால் அப்படித்தான் பேசுவார்கள்; 'நம்மைப் பற்றி மட்டுமா அவர் பேசுகிறார்?' என்று எண்ணி விட்டுவிட வேண்டும்'' என்றார்.

அண்ணா ஒரு சிறந்த மேடை நடிகர்.




# இதயத்தில் உள்ள ஈர நினைவுகள்

இப்போதும் ஒரு சம்பவம் நிழலாடுகிறது. திராவிட நாடு பத்திரிகை வளர்ச்சி நிதிக்காக என் தந்தையும், சிதம்பரம் நகர கழகப் பிரமுகர்களும் 'சந்திரோதயம்' நாடகத்தை ஏற்பாடு செய்திருந்தார்கள். திருவொற்றியூர் சண்முகம் தலைமை வகித்தார். அந்த நாடகத்தில் ஜமீன்தாராக நடிக்கும் அண்ணா பல நல்ல கருத்துக்களையும் கொள்கைகளையும் சொல்லுவார். அதே சமயம் தாம் செய்த கொலை, கொள்ளை ஆகிய குற்றங்களுக்காக தண்டனையிலிருந்து தப்ப, விஷம் அருந்தி உயிரை



**பெரியார் எவ்வளவு கண்டித்தாலும் அண்ணா வருத்தம் அடையமாட்டார்!**

விடப் பணிந்து விடுவார். அந்தக் காட்சியில் அண்ணாவின் நடிப்பாற்றலைப் பார்த்து அவர் விஷக் கோப்பையை வாயில் வைக்க முனையும்போது, தலைமை வகித்த சண்முகம் ஆவேசத்தோடு எழுந்து, ''அண்ணா! நீங்கள் எதற்கு உயிரை விடவேண்டும். விஷம் அருந்தக் கூடாது'' என்று மெய்மறந்து கூச்சல் போட்டுவிட்டார்.

கசப்பான, கடுமையான கருத்துக்களை எடுத்துக்கூறும்போதுகூட பேச்சில் கனிவு வேண்டும் என்பது அவர் விருப்பம். ''பொதுமக்கள் விரும்பாத ஒன்றை அவர்களிடம் அழுத்தமாகக் கூறுவதன் மூலம் அவர்கள் நம்மைவிட்டு விலகிச் சென்று விடக் கூடாது என்ற கவனத்துடன் செயல்பட வேண்டும்'' என்பார். சமுதாய, சீர்திருத்தப் பிரசாரத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்தபோது, நாவலர் நெடுஞ்செழியன் புராண, இதிகாசங்களைத் தாக்கிப் பேசுவார். அண்ணா நாவலரிடம், ''கடவுள் உண்டு என்பதற்கு எவ்வாறு ஆதாரம் இல்லையோ, அதேபோல் கடவுள் இல்லை என்பதற்கும் ஆதாரம் அவரவர் அறிவே தவிர வேறு இல்லை. மக்கள் நன்மைதான் தேவை. அவர்கள் விரும்புகிற வழியில் சென்றுதான் திருத்த வேண்டும். நமது நாட்டில் பெரும்பாலானோர் ஆஸ்திகக் கருத்துடையவர்கள். எனவே 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற நமது கருத்தையும், மக்கள் மனத்தில் பதியும் வண்ணம் எடுத்துக் கூற வேண்டும்'' என்று சொன்னார். 'கடவுளின் மீது நம்பிக்கையில்லாதவர்கள் தாழ்த்தப்பட்டவர்களின் ஆலயப் பிரவேசம் குறித்து அக்கறை காட்டுவது ஏன்?' என்ற கேள்வி எழுப்பப்பட்டது. ''இது பக்திப் பிரச்னையல்ல; உரிமைப் பிரச்னை. தீண்டத்தகாதவர்கள் என்று ஒதுக்கி வைக்கப்பட்டிருப்பவர்களின் உணர்வுப் பிரச்னை. சமூக உரிமை, சமத்துவ உரிமை ஆகியவற்றின் உள்ளார்ந்த தத்துவத்தின் விளைவு இது. எந்த வாதத் திறமையாலும், ஒரு சமூகத்தின்



நம்மைப் பற்றி மட்டுமா கவிஞர் பேசுகிறார்!

உரிமையை மறைத்துவிட முடியாது. ஆகையால், ஆதி திராவிடர்களுக்கும் கோயிலைத் திறந்துவிடுவதுதான் நியாயம்'' என்று தம் வாதத்தை எடுத்து வைத்தார் அண்ணா.

**அ**ண்ணாவின் மனிதாபிமானத் துக்கும், மனித நேயப் பண்புகளுக்கும் சான்றாக ஆயிரம் நிகழ்ச்சிகளைக் கூறலாம். பட்டுக்கோட்டை அழகிரி காச நோயால் பாதிக்கப்பட்டுப் படுக்கையில் இருந்த நேரம் அது. அவரும் அவர் குடும்பமும் வறுமையில் வாடாதிருக்க நிதி சேர்த்துக் கொடுக்கும் முயற்சியில் அண்ணா ஈடுபட்டார். நிதி சேர்ப்பதில் பெரியார் அவர்கள் கருத்து மாறுபட்டிருந்தார்கள். ஆனால், அண்ணா ஒய்ந்து விடவில்லை. தம்மைக் கூட்டங்களுக்கு அழைக்கும் தோழர்கள் அழகிரிக்கு நூறு ரூபாய் அனுப்பி விட்டு, அதற்கான ரசீதை அனுப்பி வைத்தால்தான் கூட்டங்களில் கலந்து கொள்வேன் என்று அறிக்கை விட்டார்.

**த**மிழக அரசியலில் முதுகுளத்தூர் சம்பவம் மிகப் பெரிய அரசியல் பிரச்னையாக உருவாகிவிட்டது. பாதிக்கப்பட்ட தாழ்த்தப் பட்டவர்கள் சார்பாகவும் அரசு அடக்குமுறைக்கு ஆளான முக்குலத்தோர் சார்பாகவும் கொதிப்புணர்ச்சி மேலோங்கி நின்றது. தென்பாண்டி மண்டலத்தைச் சேர்ந்த மற்ற கட்சியினரும் தமது சார்பு நிலைக்கு ஏற்பவும், தாம் சார்ந்த அரசியல் கட்சித் தலைவருக்குத் துணையாகவும் கட்சி கட்டி நின்றனர். அப்போது காங்கிரஸ் அரசின் மீது கொண்டு வரப்பட்ட நம்பிக்கையில்லா தீர்மானத்தின் மீது அண்ணா ஆற்றிய உரை அற்புதமானது. தீர்மானத்தின் மீது நடந்த


* என்.எஸ்.கே., மருதகாசி, அண்ணா

வாக்கெடுப்பில் தி.மு.க. கலந்து கொள்ள வில்லை. இதற்கான காரணம் சிலருக்குப் புரியவில்லை. கட்சியிலேயே இரண்டு தோழர்கள் மாற்றுக் கருத்து கொண்டிருந்த தால் விவாதத்தில் கலந்துகொள்ள வில்லை. ''வகுப் புக் கலவரங்கள் ஏற்பட்டால் அதனால் ஏற் படக் கூடிய கொடுமை மிகப் பெரிய அளவு என்ப தாலும், அது முற்றுப்புள்ளி



வைக்கப்பட வேண்டிய பகையு ணர்ச்சி என்பதாலும், அந்த ரத்தம் தோய்ந்த வரலாற்றுக்கு தானோ தன் கட்சியோ காரணமாகிவிடக் கூடாது என்பதாலும் 'எல்லோரும் ஓர் குலம்' என்ற லட்சியத்தை உணரச் செய்கிற இடத்தில் தி.மு.க. இருப்பதாலும்தான் தீர்மானம் வாக்கெடுப்பில் கலந்து கொள்ளவில்லை'' என்பதை விளக்கினார் அண்ணா. அதே சமயம் நீதி விசாரணை நடத்த முன்வராத அரசைக் கண்டித்து வெளிநடப்பு செய்தார்.

அண்ணாவுக்கு உள்ள மற்றொரு சிறப் பான பண்பு மற்றும் தலையாய குணமாக நான் நினைப்பது, மற்றவர்களை மனம் திறந்து பாராட்டுவது. நாவலர் பேச்சையும் என்னுடைய மேடைப் பேச்சுக்களையும் மனம் திறந்து பாராட்டுவார்; தவறுகள் இருப்பின் சுட்டிக் காட்டுவார். கலைஞரின் எழுத்துக்களை ரசிப்பார். 1962 தேர்தலில் அண்ணா தோற்றுவிட்டார். நானும் தோற்றுவிட்டேன். அண்ணா தோற்று விட்டாரே என்று மனம் வருந்திக் கொண் டிருந்தேன். அப்போது அண்ணா என் இல்லம் தேடி வந்துவிட்டார்.

''நீயாவது ஜெயித்திருக்கலாம்; தோற் றதற்காக வருத்தப்படாதே! வெற்றி - தோல்வி என்பது இரவு - பகல் போன்றது'' என ஆறுதல் சொன்னார்.

அண்ணா அடையாறு புற்றுநோய் மரு த்துவமனையில் அனுமதிக்கப்படுவதற் குச் சில நாட்கள் முன்பு ஒரு நாள் இரவில் நீண்ட நேரம் கண் விழித்து கோப்புகளைப் பார்த்து கொண் டிருந்தார். நான், ''ஏன் கண் விழித்துச் சிரமப்படுகிறீர்கள்... நாளை பார்க் கலாமே'' என்றேன்.

**இப்போது கோப்புகளில் கையெழுத்துப் போடவில்லையென்றால் எப்போது?**

''இப்போது கோப்புகளில் கையெழுத்து போடவில்லை என்றால் எப்போதுதான் போடுவேன்?'' என்று அவர் கேட்கவும், எனக்கு விழியோரம் நீர் கோத்துக்கொண்டது. தனக்கு முடிவு விரைவில் வரும் என்பதை மறைமுகமாக எனக்கு உணர்த்த அண்ணா சொன்னது அது. அன்று எனக்கு ஏற்பட்ட அதிர்ச்சி, நீங்காத அதிர்ச்சியாக நிலைத்து விட்டது.

தொகுப்பு : **ஸ்ரீநி**

பேரறிஞர் அண்ணாவின் புகைப்பட ஆல்பம் 48 - 49-ம் பக்கங்களில்...



# வளையல் வசீகரம்

வளையல் என்றால் வட்டமாகத் தான் இருக்க வேண்டும் என்ற நியதியை உடைத்து, சதுரம், ஷட்கோணம், அட்டகோணம்... என ஏக பாட்டர்ன்ஸ், 'கோணலாயிருந்தாலும் என்னோடதாக்கும்' என ஜாலியாக கேர்ள்ஸும் வளைய வந்து கொண்டிருக்கிறார்கள்.

இனி வளையல்களைப் பற்றிய சில சுவாரஸ்யத் தகவல்கள்

● மிக மிக அதிகமாக கண்ணாடி வளையல்கள் தயாராகும் இடம் உத்தரப் பிரதேசத்திலிருக்கும் ஃபிரோஸாபாத். ● பாங்கிள் மார்க்கெட், சூடி பஸார் என்ற பழைமையான, ஆனால், மிகப் பிரபலமான வளையல் மார்க்கெட் ஹைதராபாதிலிருக்கும் 'லாட் பஜார்'. சார்மினார் வளையல்கள் உலகப் பிரசித்தம். ● ராஜஸ்தானில் அரக்கு (லாக்) வளையல்கள் ஃபேமஸ். கலர் கலரான அரக்கு வளையல்களில் கற்கள் பதித்து அட்டகாசமாக ஜொலிக்கும். ● மர வளையல்கள் மற்றும் பேப்பர் மாஷ் பெயின்டட் வளையல்கள் காஷ்மீர் ஸ்பெஷல்! ● வங்காளப் பெண் 'தனக்குத் திருமணமாகிவிட்டது' எனத் தெரிவிக்கும் வகையில் சங்கு + சிவப்பு (போலா ஷாக்கா) வளையல்களுடன் 'லோஹா' எனச் சொல்

பாரம்பர்யம் + ஃபேஷனாக ஒரே ஆக்ஸஸரீஸால் இருக்க முடியுமா? சங்க இலக்கியக் காலத்திலிருந்து தற்போதைய மாடர்ன் பெண்கள் வரை அனைவரையும் கவரும் அணிகலன் வளையல்.

மெட்டல், ரப்பர், வுட் (மர), ப்ளாஸ்டிக்... என தினுசு, தினுசாக போட்டு ரகளையடித்துக் கொண்டிருக்கின்றனர். ''கோல்டு பாங்கிள்ஸ் பாட்டி, அம்மாதான் போட்டுக்குவாங்க...'' என்ற கொஞ்சலுடன் வளையல்கள் கலகலக்கப் பறக்கின்றனர். லேட்டஸ்ட் டிமாண்ட் மர வளையல்கள்! விதவிதமாக பெயின்ட் செய்யப்பட்ட இந்த 'வுடன் பாங்கிள்ஸ்' ஸ்கர்ட், ஜீன்ஸ், கேப்ரீ... என எந்த ட்ரஸ்ஸுடனும் போடலாம்.

லப்படும் இரும்பு வளையலும் கண்டிப்பாக அணிந்திருப்பாள். ● பஞ்சாபிப் பெண்கள் திருமணம் ஆகி ஆறு மாதம் வரை கைகளில் சிவப்பு மற்றும் தந்த வளையல்களை (சூடா) சும்மா டஜன் கணக்கில் போட்டிருப்பார்கள். இது ஃபேஷனாக மாறி இப்போது எல்லா இனப் பெண்களுமே அடுக்கி அழகு பார்த்துக் கொண்டிருக்கின்றனர். தந்தம் தடை செய்யப்பட்டதால் ப்ளாஸ்டிக் வந்து விட்டது. ● குஜராத்தி மணப்பெண், தாய்மாமன் வீட்டிலிருந்து வரும் தந்த வளையல்களைப் போட்ட பிறகே மணமேடை ஏறுகிறாள். ● மராத்திப் பெண்கள் பச்சை கண்ணாடி வளையல்கள் சுபம் எனக் கருதி கண்டிப்பாக கைகளில் அணிகின்றனர். ● தமிழ்நாட்டில் பிரபலமான 'வளைகாப்பு' அனைவரும் அறிந்ததே. ரீங்கரிக்கும் வளையோசை குழந்தைக்கு இதமான இசை. மருத்துவர்களும் விஞ்ஞானிகளும் ஆமோதிக்கும் ஃபாக்ட்! ● லம்பாடி என்ற பழங்குடி இனப் பெண்கள் மற்றும் பஸ்தர் (ம.பிரதேசம்) பழங்குடிப் பெண்களும் முழங்கையிலிருந்து தோள்பட்டை வரை வெள்ளை நிறத்தில் வளையல் அணிந்திருப்பார்கள். இது எலும்பினால் செய்யப்பட்டது. கிராக்கி அதிகம். ● சீக்கிய ஆண்கள் கைகளில் 'கடா' என்ற பட்டை வளையல் போட்டிருப்பார்கள். இது கண்டிப்பாகப் போட வேண்டிய அணிகலன்.

கண்ணாடி வளையல்களின் ஒவ்வொரு நிறத்துக்கும் ஒவ்வொரு மகிமை. சிவப்பு - எனர்ஜி, மஞ்சள் - மகிழ்ச்சி, ஆரஞ்சு - வெற்றி, கறுப்பு - பவர், க்ரீன் - லக், பொன் நிறம் - அதிர்ஷ்டம், சில்வர் - வலிமை... என அர்த்தங்கள் ஆயிரம்!

வளையோசை கலகலகலவென...

**- லதா சேகர்**



# கல்கி



2009 செப்டெம்பர் 20
விரோதி புரட்டாசி 4
மலர் : 68
இதழ் : 8

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## விபத்தும் விபரீதமும்

இரங்கல் கூட்டத்திலேகூட அநாகரிகமாக நடந்து கொள்ளும் அளவுக்கு, காங்கிரஸ் கட்சியின் கட்டுக்கோப்பு அடியோடு கலகலத்துப் போயிருக்கிறது! அதிலும் ஒரு சராசரி இரங்கல்கூட்டம் அல்ல... மக்கள் ஆதரவை அமோகமாகப் பெற்ற ஒரு வெற்றிகரமான தலைவர், மிக வருந்தத்தக்க முறையில் விபத்தில் இறந்து போனதற்கான இரங்கல் கூட்டம்!

ராஜசேகர ரெட்டி பயணம் செய்த ஹெலிகாப்டரை முறையாகப் பழுது பார்த்து, சர்வீஸ் செய்து ஆஜர்படுத்தவில்லை என்பது அதிர்ச்சியூட்டும் செய்தி. இதனை முதல்வரின் பாதுகாப்புப் பிரிவு ஒப்புக் கொண்டிருக்கிறது! அவரது பிரத்யேக ஹெலிகாப்டர் பராமரிப்புக்காகச் சென்றிருந்த நிலையில், பயணத்தை ஒரு நாள் ஒத்தி வைக்குமாறு யாரும் அவருக்கு அறிவுறுத்தியதாகத் தெரியவில்லை! முதல்வர் பயணித்து விபத்துக்குள்ளான ஹெலிகாப்டரைச் செலுத்திய விமானி, தமது துறையில் நிகழ்ந்த சில வாக்குவாதங்களால், கலவரமுற்ற மனநிலையில் இருந்திருக்கலாம் என்றும் கூறப்படுகிறது. தவிர்த்திருக்க வேண்டிய, தடுத்திருக்கக்கூடிய பயணம்!

இந்த கோர நிகழ்வின் துயரத்தையும் அதிர்ச்சியையும் மீறி, உட்கட்சிப் பூசலும் பதவி மோகமும் காங்கிரஸ் உறுப்பினர்களை ஆட்டிப் படைத்திருக்கின்றன! ராஜசேகர ரெட்டிக்குப் பிறகு அவரது மகன் ஜெகன்மோகன் ரெட்டியைத்தான் முதல்வராக்க வேண்டும் என்று ஒரு தரப்பினர். இதே பதவியின்மேல் ஒரு கண் வைத்துள்ள டி.சீனிவாஸ் மற்றும் இதர தலைவர்களின் கோஷ்டியினர், காங்கிரஸ்

அந்த ஹெலிகாப்டர்தான்
அடியோட நொறுங்கிப்போச்சு.
இதையாவது காப்பாத்த முடியுமா
பாருங்க...




மேலிடத்தின் ஆசி பெற்ற ரோசய்யா ஆதரவாளர்கள் - என்று தலைக்குத் தலை நாட்டாண்மை நடத்த முயன்றிருக்கிறார்கள்! இதைக் காட்டிலும் ஒரு விபரீதம் காங்கிரஸ் கட்சிக்கு இருக்க முடியுமா என்பது சந்தேகமே!

ஜெகன்மோகன் ரெட்டிக்கு முப்பத்தாறு வயதுதான் ஆகிறது. அவர் நாடாளுமன்ற உறுப்பினராகியிருப்பது இதுவே முதல் முறை. எனினும், 120 காங்கிரஸ் எம்.எல்.ஏ.க்கள் அவரை ஆதரிக்கின்றனர்! ஆதரவு ஜெகன்மோகன் ரெட்டியின் ஆற்றலுக்கா அல்லது ஒய்.எஸ்.ஆர். சேர்த்துள்ள 'செல்வாக்கின்' வாரிசுக்கா?!

மூன்று தலைமுறைகளாகக் காணாமல்போன உட்கட்சி ஜனநாயகத்தைச் சீர்செய்தாலன்றி, காங்கிரஸ் உருப்பட வழியில்லை. ஆனால், அந்த முயற்சியை மேற்கொள்ள ராகுல் காந்தி முன்வரும்போதே கோஷ்டிப் பூசல்களைத்தான் எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது! இளைஞர் காங்கிரஸை ஒருங்கிணைத்து, உறுப்பினர் சேர்த்து, உட்கட்சித் தேர்தல் நடத்தும் நோக்கத்துடன் ராகுல் காந்தி தமிழகத்துக்குப் பயணம் மேற்கொண்டால், அவரை எப்படி வரவேற்பது என்று தமிழக காங்கிரஸின் வெவ்வேறு கோஷ்டியினர் தனித்தனியே கூட்டங்கள் நடத்துகிறார்கள்!

ஆந்திர சிக்கலை விடுவிக்கும் பொறுப்பு பிரணாப் முகர்ஜி தலையில் சுமத்தப்பட்டிருக்கிறது. இப்படியெல்லாம் மேலிடத்தின் தலையீடு இன்றி, காங்கிரஸ் தனது கோட்பாட்டின் பலத்தில் கண்ணியமாக இயங்கும் அளவுக்கு ஓர் ஆரோக்கியமான சூழல் உருவாக வேண்டும். அந்தக் கட்டுக்கோப்பு, அடிமட்டத்திலிருந்து, அகில இந்தியத் தலைமை வரை உட்கட்சி ஜனநாயகம் செயல்படுவதன் மூலம்தான் வரும்.

முற்றிலும் தவிர்க்கப்பட்டிருக்கக் கூடிய ஒரு விபத்தைத்தான் தவிர்க்கவில்லை; அதைத் தொடர்ந்து நடைபெறும் பதவிப் பூசல் அநாகரிகத்தையாவது தவிர்க்கக் கூடாதா?! ●

● 'அணு ஆராய்ச்சி மற்றும் அணுகுண்டு உற்பத்தியின் அபாயங்கள், மனித குலத்தின் எதிர்காலத்தையே கேள்விக்குறியாக்கக் கூடியவை' என்ற தலையங்க வரிகள் நிதர்சனம். - கு.ப.இரகுநாதன், பூவிருந்தவல்லி ● இடியாப்பச் சிக்கலான கேள்விகளுக்கும் சிந்திக்க வைத்து, சிரிக்க வைக்கும் கிரேஸி ஒரு சிலேடைச் சிற்பி.- ஜி.அப்துல்பாரி, பழனி ● 'சிகாகோ மாம்பழம்' சிறுகதை ருசித்தது. அதே சமயம், அமெரிக்க கஸ்டம்ஸ் பரிசோதனைக் கடுமையைத் தெளிவாக விளக்கியது. - ஜி.கீர்த்தனா, நெய்வேலி ● REACH அமைப்பும், அதனுடைய 'கோயிலும் மசூதியும் ஒண்ணுதான்' என்ற கொள்கையும் மத நல்லிணக்கத்துக்கு ஒரு வழிகாட்டி! - இந்திரன், நாகர்கோவில் ● இந்தியா கருத்துச் சுதந்திரமற்ற சர்வாதிகார நாடு என்று கூறும் இயக்குநர் சீமானுக்கு 'தராசு' அளித்த பதில் நெத்தியடி.- த.சத்தியநாராயணன், அயன்புரம் ● 'சினி சிப்ஸ்' சூப்பருங்ணா! ஒவ்வொரு சிப்ஸுக்கும் நியூஸ்பாய் கமெண்ட், அதைவிட படு சூப்பருங்ணா! - ப.கோபி பச்சமுத்து, கிருஷ்ணகிரி ● காங்கிரஸ் கட்சியில் இருக்கிற பிரிவுகள் போதாதென்று விஜய் காங்கிரஸா? தாங்காது சாமி! - வே.ஈஸ்வரன், இராஜபாளையம் ● க்ரைம். காமில் ஈஸியான க்ளூ கொஞ்சம் கொஞ்சமாக கஷ்டமான க்ளூவாக மாறிடுச்சு. - மு.மதிவாணன், அரூர் ● ஆன்மிகத் தளங்கள், பாரதியார், பாரதிதாசன், மாதா கோயில், ஆரோவில், மணக்குள விநாயகர்... என அப்பப்பா... திக்குமுக்காட வைத்துவிட்டீர்! - கோவை.நா.கி. பிரசாத் ● முகங்களைத் தேடியலைந்து சைக்கிள் ரிக்ஷாக்காரர்களின் பரிமாணங்களை ஓவியமாக வடித்துள்ள ராஜ்குமார் ஸ்தபதியின் தூரிகைக்கு வாழ்த்துகள்! - வரத.சண்முக சுந்தரவடிவேலு, வாழப்பாடி ● திரை நுணுக்கங்கள், புலமை, சம்பந்தப்பட்டவர்களைத் தட்டிக் கொடுத்து வாங்கவேண்டியதை வாங்கும் ஆளுமை; எல்லாவற்றின் மொத்தக் கலவையே 'கமல்' என்பது புலனாகிறது. - பகவதி பிரவின், சென்னை - 53

வட்டமேஜை

# தாங்காது சாமி!

துப்பறிய வாங்க போட்டி - 10 முடிவு

சரியான விடையை எழுதியவர்களுள் குலுக்கல் முறையில் தலா ரூ.200/- பரிசு பெறுபவர்கள்:

1. அதிபன், ஈரோடு, 2. என்.ஏ.லதா, பழனி
3. என்.பூங்காவனம், திருப்பத்தூர்
4. எஸ்.ஸ்வேதா, சென்னை
5. லலிதா லக்ஷ்மணன், சென்னை

''வெகுயதார்த்தமான 'வெயில்' படத்தின் மூலம் ரசிகர்களின் பாராட்டையும், திரைப்பட விழாக்களில் விருதுகளையும் பெற்ற இயக்குநர் வசந்தபாலனின் அடுத்த படம் 'அங்காடித் தெரு'. சென்னை நகரின் பரபர சுறுசுறு ரங்கநாதன் தெருதான் கதையின் களம் என்பதைவிட, கதையின் ஹீரோ என்று சொல்லலாம். படம் பற்றிப் பேசுகிறார் வசந்தபாலன்.

# ''என் ஹீரோயின் அப்படி

**ஏன் நீண்ட இடைவெளி?**

''வெயில் ரிலீஸாகி ஏறத்தாழ ஒரு வருடம் வரை பல்வேறு திரைப்பட விழாக்களுக்கும் சென்று வெயில் படத்தைத் திரையிடுவதற்கு வாய்ப்பு கிடைத்தது. அதற்காக விண்ணப்பிப்பது, பயண ஏற்பாடுகளைக் கவனிப்பது, ஆங்கிலம், பிரெஞ்ச் என்று பிற மொழி சப் - டைட்டில்கள் போடுவது என கொஞ்சம் பிஸியாக இருந்துவிட்டேன். அதெல்லாம் ஒரு வழியாக முடிந்தபிறகு 2007 கடைசியில்தான் அடுத்த படம் தொடர்பான பணிகளை ஆரம்பித்தேன். 2008ல் 'அங்காடித் தெரு' படத்தின் ஷூட்டிங். திட்டமிட்டபடி, படத்தை நான் முடித்துக்கொடுத்துவிட்டேன். தயாரிப்பாளரது பொருளாதாரப் பிரச்னைகள் காரணமாக எப்போது படத்தை வெளியிடுவது என்பது இன்னமும் முடிவாகவில்லை.''

**தி.நகர் மீது காதலா?**

''பல வருடங்களாகவே சென்னையில் என்னை மிகவும் வியக்க வைக்கும்

ஏரியா தி.நகர். அது நடுத்தர மற்றும் கீழ்த்தட்டு மக்கள் அதிகம் புழங்கும் ஒரு மிக பிஸியான ஏரியா. அதுவும் ரங்கநாதன் தெருவில், நெரிசலான நேரங்களில் ஒரு மணிநேரத்தில் ஒரு லட்சம் பேர் புழங்குவதாக ஒரு தகவல்கூட உண்டு. ஆனால், அந்த தி.நகரை, அதன் ஜன நடமாட்டத்தை, அதன் வியாபாரப் பரிமாணத்தை, எப்படி ஃபிலிமுக்குள் அடக்குவது என்றுதான் எனக்குப் புரியவில்லை. தெருக்கள் பற்றிய பதிவுகளை ஆங்காங்கே தமிழ் இலக்கியங்களில், நாவல்களில் நான் படித்திருக்கிறேன். ஒரு சில ஆங்கில ஆக்ஷன் படங்களிலும், க்ரைம் த்ரில்லர்களிலும் அது காட்டப்பட்டுள்ளது என்றாலும், இதுவரை யாரும் அதை தமிழ்த் திரையில் காட்ட முயன்றதில்லை.''



- இயக்குநர் வசந்தபாலன்

# ...ஒன்றும் அழகில்லை!''

**ஆக, ரங்கநாதன் தெருதான் ஹீரோவா?**

'' 'வெயில்' படத்தின் படப்பிடிப்பு முடிந்து, போஸ்ட் புரொடக்ஷன் வேலைகளைக்

கவனித்துக் கொண்டிருந்தபோதே அங் காடித் தெருவின் கதையை நான் கண் டெடுத்துவிட்டேன். அப்போது ஷங்கர் ஸாரின் இம்சை அரசனின் போஸ்ட் புரொடக்ஷன் வேலைகளும் நடந்து கொண்டிருந்ததால், வெயில் பட வேலைகள் தினமும் இரவு பதினொரு மணிக்கு மேல்தான் ஆரம்பமாகும். அந்த நாட்களில் தி.நகரில் துரைசாமி பாலத் துக்கு அருகில் உள்ள ஒரு சர்தார்ஜியின் சப்பாத்திக் கடையில் இரவு சாப்பிடுகிற போது, யூனிஃபார்ம் அணிந்த வயசுப் பையன்கள் மற்றும் பெண்களுடைய நட மாட்டம் என் கவனத்தை ஈர்த்தது. 'அவர் கள் எல்லாம் யார்? இந்த நேரத்தில் எங்கே போகிறார்கள்?' என்று விசாரித்துப் பார்த்த போது, தி.நகர் பகுதிகளில் உள்ள பெரிய, பெரிய கடைகளில் விற்பனை பையன்கள், பெண்கள்தான் அவர்கள். ஏறத்தாழ அவர்கள் அனைவருமே நெல்லை மண்ணைச் சேர்ந்தவர்கள். அவர்கள் யாரும் பெரிசாகப் படித்தவர்கள் இல்லை; அவர்கள் படித்த படிப்புக்கு அங்கே பிரமாதமான வேலை எதுவும் கிடைக்காது. எனவே, சொந்த மண்ணை விட்டு, சொந்த, பந்தங்களைப் பிரிந்து வயிற்றுப் பிழைப்புக்காக சென்னைக்கு வந்தவர் கள்... என்றெல்லாம் தெரிய வந்தது.

அடுத்து, தினமும் அவர்களைக் கூர்ந்து கவனிக்க ஆரம்பித்தேன். அவர்களுக் கென்று ஒரு தனி உலகம் இருப்பது புரிந்தது. ஆண்களும், பெண்களும் தனித் தனியாகச் சிறு குழுக்களாக நடந்து போவது; அவர்களுக்குள் கலகலப்பு, சிரிப்பு, கிண்டல், கேலி எல்லாமும் உண்டு என்பதை மட்டுமில்லாமல், அவர்களுக்குள்ளே கட்டுப்பாடுகள் நிறைந்த, அடிமைகள் போன்ற வாழ்க்கை வாழ்வதற்குரிய சோகமும் அடிமனத்தில் இருப்பதைப் புரிந்துகொண்டேன். இதற்கிடையில் சட்டென்று தன் சகாக்களை விட்டு விலகி, ஒரு பையன் சற்றே பின் தங்குவது, சிறிது நேரத்தில் அங்கே வரும் பெண்கள் குரூப்பிலிருந்து ஒருத்தி தனிமைப்படுவது, இருவரும் கைகளாலும், வார்த்தைகளாலும் எதையோ பரிமாற்றம் செய்துகொள்வதையும், ஒரு பையன் பூ வாங்கிச் செல்வதையும், நான் கவனிக்கத் தவறவில்லை. எல்லாவற்றை யும் மீறி அங்கேயும் காதல் உண்டு என அறிந்துகொண்டேன். அவர்களின் வாழ்க்கை என்னை ஆச்சரியப்படுத்தியது; மனசுக்குள் ஒரு குறுகுறுப்பை ஏற்படுத்தி யது; இவர்கள் வாழ்க்கைகூட ஒரு சினிமா கதைக்கான சுவாரஸ்யமான கருதான் என்று தோன்றியது.''

**" 'அவள் அப்படி ஒன்றும் அழகில்லை'**
**- என்ற பாடலை மிகச் சிறந்த பாடலாக சிங்கப்பூர், மலேசியா பண்பலை வானொலிகள் தேர்ந்தெடுத்திருக்கின்றன!"**

**எத்தனை மனிதர்கள்! எத்தனை விதங்கள்!**

''ரெங்கநாதன் தெருவில் சில வித்தியாச மான மனிதர்களையும் சந்தித்தேன். கண் பார்வை உடைய ஒருவர், நான்கு பார்வை யற்றவர்களுக்கு வழிகாட்டியாக வருகிறார். அவர்கள் பிச்சை எடுக்கிறார்கள். அங்கே பிளாட்ஃபாரக் கடை வைத்திருக்கும் பலர், தாம்பரம், செங்கல்பட்டு, வேலூர் போன்ற ஊர்களிலிருந்து தினமும் காலை யில் வந்து வியாபாரம் செய்துவிட்டு, இரவு ஊர் திரும்புகிறார்கள். இங்கே அவர்கள் பிளாட்ஃபார வியாபாரிகள் என்றாலும், ஊரில் சொந்த வீட்டில், சௌகரியமாக வாழ்கிறவர்கள். ஓர் உடல்

ஊனமுற்ற பிச்சைக்காரரை தினமும் அவருடைய அம்மா அழைத்துக் கொண்டுவந்து காலையில் இங்கே விட்டுவிட்டு எங்கேயோ வேலைக்குப் போய்விடுகிறார்கள். மாலையில் மறுபடி அம்மா வந்து வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போகிறார். இப்படி எத்தனையோ விதமான மனிதர்கள்!''

### புதுமுக ஹீரோ

''சென்னை மாநகரத்தில் ஷூட்டிங் நடத்தினால் போக்குவரத்துக்கு இடைஞ்சல் என்பதால், பகலில் ஷூட்டிங்குக்கு போலீஸ் அனுமதி தருவதில்லை. எனவே இரவில்தான் ஷூட்டிங் நடத்தியாக வேண்டும். ஆனாலும், பகலில், ஜன நெரிசலில் எடுக்க வேண்டிய காட்சிகளைப் பகலில்தானே எடுத்தாக வேண்டும்? எனவே, படத்தில் ஹீரோ புதுமுகம் என முடிவு செய்தேன். சுமார் நான்கு மாத காலம் தேடி, திருநெல்வேலியைச் சேர்ந்த ஓர் இளைஞரைக் கண்டுபிடித்தேன். பெயர் மகேஷ். ஏற்கெனவே 'கற்றது தமிழ்' படத்தில் நடித்த அஞ்சலிதான் ஹீரோயின். பகலில், நெரிசலுக்கு இடையில் எடுக்க வேண்டிய காட்சிகளை, முன்கூட்டியே திட்டமிட்டு, சம்பந்தப்பட்ட கடைக்காரர்களிடம் பர்மிஷன் வாங்கி, கேமராக்களை வைத்து, முதல் நாள் இரவில், எங்கிருந்து எப்படி வரவேண்டும், என்ன செய்ய வேண்டும் என ஒத்திகை பார்த்துக் கொண்டு, மறுநாள் ஜன நெரிசலில் அவர்களை நுழைய வைத்து, படம் பிடித்தோம். மற்ற காட்சிகளை இரவிலேயே எடுத்து முடித்தோம். கடைக்குள்ளே நடக்கும் காட்சிகளுக்காக மட்டும் செட் போட்டுக்கொண்டோம்.''

### இசை இருவர்

''படத்துக்கு 'வெயில்' படத்தின் இசையமைப்பாளரான ஜி.வி.பிரகாஷ், விஜய் ஆண்டனி இருவருமாக ஐந்து பாடல்களுக்கு இசை அமைத்திருக்கிறார்கள். 'அவள் அப்படி ஒன்றும் அழகில்லை' என்ற பாடல் தமிழ்நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் ஒலித்துக் கொண்டிருக்கிறது. இதில் அவள் என்பது என் ஹீரோயின். மலேசியா, சிங்கப்பூர் பண்பலை ரேடியோக்களில் கடந்த ஆறு மாதங்களில் வெளியான மிகச் சிறந்த பாடலாக அதைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். புல்லும், பூண்டும் என்ற நா.முத்துக்குமாரின் பாடல், வறுமையைச் சொல்லும் உலகின் மிகச் சிறந்த ஐந்து பாடல்களுள் ஒன்றாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளது.''


* ஜி.வி.பிரகாஷ்


* நா. முத்துக்குமார்


* விஜய் ஆண்டனி

சந்திப்பு : **எஸ்.சந்திரமௌலி**

வீரர்களோடு சேர்ந்து ரசிகர்களுக்கும் கடந்த இரண்டு மாதங்களாக நல்ல ஓய்வு. அதீத கிரிக்கெட் பிரியர்கள் மட்டும் ஆஷஸ் ஆட்டங்களை ஒன்றுவிடாமல் கண்டுகளித்தார்கள். ஆனால், இனி அடுத்த சில வருடங்களுக்கு ஓய்வு என்பதே இந்திய கிரிக்கெட்டில் இருக்கப்போவதில்லை. தினமும் ஷட்டரைத் திறந்து கடை வியாபாரத்தைத் தொடங்குவது போல, இந்திய கிரிக்கெட் வாரியம் கிரிக்கெட்டிலிருந்தும் தினசரி வருமானம் எதிர்பார்க்கத் தொடங்கிவிட்டது. ஒருநாள் போட்டித் தொடர்கள், 20-20 போட்டிகள், டெஸ்ட் மேட்ச்சுகள், சேம்பியன் லீக், மீண்டும் ஒரு ஐ.பி.எல்., அதற்குள் இன்னொரு 20-20 உலகக்கோப்பை என வரிசை கட்டி நிற்கின்றன கிரிக்கெட் போட்டிகள். அரைநாள் இடைவெளி கிடைத்தாலும் அதிலும் ஒரு போட்டி நடத்திட வாரியம் துடித்துக்கொண்டிருக்கிறது. இதற்கு, கடந்த வாரம் நடந்த கார்ப்பரேட் கோப்பை நல்ல உதாரணம்.



# தினக்கூலி

இன்றைக்கு கிரிக்கெட் வர்த்தகம் உச்சத்தில் இருக்கிறது. முதலீடு செய்பவர்களும் அதிகப் பார்வையாளர்களும் கிரிக்கெட் மீது வந்து விழுகிறார்கள். ஒவ்வொரு நிமிடமும் டாலர்களில் அளக்கப்படுகின்றது. வீரர்களைப் பற்றிக் கவலைப்படாமல் ஆட்டங்களை ஏற்றிக்கொண்டே போகிறார்கள். டீ.வி. சீரியல்போல மாறிவிட்டது கிரிக்கெட்.

தினமும் வீட்டுக்குச் சென்றால் நேரலையாக ஒரு கிரிக்கெட் ஆட்டம் பார்ப்பது என்பது பார்வையாளர்களுக்குச் சந்தோஷமான ஒரு விஷயம்தான். ஆனால், கிரிக்கெட்டின் மூலாதாரமான வீரர்களை நாமும் நினைத்துப் பார்ப்பதில்லை.

இப்போது ஸ்ரீலங்காவில் மூன்று நாடுகள் பங்குபெறும் ஒருநாள் தொடர் நடந்து கொண்டிருக்கின்றது. இறுதிப் போட்டிக்கு முன் இந்தியா ஆடும் இரண்டு

## ச.ந.கண்ணன்

ஆளானார்கள். விளைவு, இலங்கை போட்டியில் மாற்றம் செய்யப்பட்டது. அடுத்தடுத்த நாட்களில் இரு போட்டிகளை ஆடவேண்டிய நிர்பந்தம். கிட்டத்தட்ட தினக்கூலி போல நடத்தப்படுகிறார்கள் இந்திய கிரிக்கெட் வீரர்கள்.




# வீரர்கள்

ஆட்டங்களுக்கு, முதலில் இருநாள் இடைவெளி விடப்பட்டிருந்தது. திடீரென்று கார்ப்பரேட் கோப்பை என்கிற ஒரு புதிய போட்டியைக் களமிறக்கியது இந்திய கிரிக்கெட் வாரியம். இதனால் கார்ப்பரேட் கம்பெனிகளில் கௌரவப் பதவி வகித்துக்கொண்டிருந்த இந்திய வீரர்கள், அந்தப் போட்டியில் கலந்து கொள்ள வேண்டிய கட்டாயத்துக்கு

கந்தசாமி, அந்நியன் போன்ற திரைக்கதாபாத்திரங்கள் மட்டுமே அநியாயத்தைத் தட்டிக்கேட்டு நாம் பார்த்திருக்கிறோம். முதல் முறையாக தாத்தா வேஷம், சேவல் வேஷம் எதுவும் போடாமல், டெல்லி கிரிக்கெட் வாரியத்தில் நிலவி வந்த ஊழல்களை வெளி உலகத்துக்கு அம்பலப் படுத்தியிருக்கிறார் வீரேந்திர ஷேவாக். தனி ஆளாக ஒரு கூட்டத்தையே எதிர்த்து வெற்றி கண்டிருக்கிறார். இந்திய கிரிக்கெட் சரித்திரத்தில் இது புதிது.

ஷேவாக் போல தோனியும் இந்திய கிரிக்கெட் வாரியம் தவறு செய்கிற நேரங்களிலெல்லாம் நாற்காலியைப் பற்றிக் கவலைப்படாமல் கேள்வி எழுப்ப வேண்டும். நிர்வாகத்தில் ஓட்டை இருந்தால், அதை மாற்றிக் காட்டுவதுதான் ஒரு நல்ல தலைவனின் அடிப்படைப் பண்பு. கிரிக்கெட்டுக்கு வெளியேயும் போராட, புதிதாக யோசிக்க, தோனி கொஞ்சம் கற்றுக் கொள்ள வேண்டும். கிரிக்கெட் பலவீனப்பட்டு விட்டால் வீரர்கள் ஏது? பணம், புகழ்தான் ஏது?

## நாட்டியரங்கம்

**நா**ட்டியரங்கத்தின் வருடாந்தர நடன விழாவில், இந்த வருடம் மகாபாரத பாத்திரங்களில் முக்கியமானவர்களை மேடைக்குக் கொண்டு வந்தனர், ஏழு கலைஞர்கள்.

பீஷ்மராக மூத்த நடனக் கலைஞர் தனஞ்செயன் - அசத்தலான அபிநயம்; அம்பையாக ப்ரியா முரளி - அநாயாசமான படைப்பு; குந்தியாக சித்ரா தாசரதி - அழுத்தமான பாத்திர வெளிப்பாடு; கர்ணனாக ஸ்ரீதர் - அனுராதா - அசாத்திய உழைப்பு; திரௌபதியாக ஸ்ரீலதா வினோத் - ஆமா, நீங்க எந்த திரௌபதியை வழங்கினீங்க, அம்மணி?; அர்ஜுனனாக ஸ்ரீகாந்த் - நீள நீளமான ஜதிகள், குறைச்சிருக்கணும்!; கிருஷ்ணராக ஷீஜித் கிருஷ்ணா - ஒணம் ஸ்பெஷலாக கதகளியும் கொஞ்சம்! (இவர்களுடைய இசைக் குழுக்களின் ஒத்துழைப்பும் ஓகோ என்றிருந்தது.)

இவர்களுக்கெல்லாம் டாக்டர் பிரேமா நந்தகுமார் தகவல் களஞ்சியமாக இருந்து உதவியிருக்கிறார்.

# ரோஹிணி கொடுத்த



**இ**ந்த வருடம் 'நாட்டியரங்கம்' ஒரு புது முயற்சியை மேற்கொண்டது. இந்தப் பாத்திரங்களை நடன வடிவத்தில் வழங்குவதற்கு முன்னால் தெருக்கூத்து, நாடகம், உரை, கவிதை வாசிப்பு, வில்லுப்பாட்டு, ஹரிகதை என்று 45 நிமிடங்களுக்கு அன்றைய பாத்திரத்தை,

இன்னோர் இணையால கலை வடிவில் வழங்க முன்வந்தது.

மேடை நாடகத்தை நேசிக்கும் நடிகர் நாசர், தேரோட்டி மகன் கர்ணனாகத் தோன்றியபோது ஏராள எதிர்பார்ப்பு. அந்த எதிர்பார்ப்பைப் பெருமளவு பூர்த்தி செய்தார் நாசர். தன் பிறப்பின் காரணமாகத் தன் 'இழிநிலை'யை மட்டுமே நினைத்துக் குமுறும் ஒரு கோணத்தில் மட்டும் தன்னை வெளிப்படுத்தியதால், பிற அம்சங்களில் உணர்ச்சி வெளிப்பாட்டுக்கு வாய்ப்பு குறைந்துவிட்டது. ஆனாலும்

# அதிர்ச்சி!

நாசரை மேடைக்கு மீண்டும் கொண்டு வர இது ஒரு முன்முயற்சி!

கதா சேஷய்யனின் 'குந்தி' உரை, பலரின் நெஞ்சைத் தொட்டு நெகிழச் செய்தது.

நடிகை ரோஹிணி வழங்கிய பாஞ்சாலி, சாதாரண சபா ரசிகர்களுக்கு அளித்தது அதிரடி அதிர்ச்சி. அதிலும், துவக்கத்தில் திரையில் ஃபேஷன் ஷோவை மேற்கத்திய இசையுடன் சில நிமிடங்கள் காண்பித்த அதிர்ச்சியிலிருந்து மீள்வதற்குள், மேடையில் தோன்றிய ரோஹிணியின் உடை, அதைவிடப் பேரதிர்ச்சி! பாரதியின் பாஞ்சாலி சபதத்திலிருந்து ஒரு சில வரிகளைப் படித்தது தவிர, ஒரே ஓட்டமும், சாட்டமும், ஓலமுமாக மேடையில் ஆர்ப்பாட்டம்தான்.

மங்கை வழங்கிய 'பனித்தீ' என்ற உஷா ராணியின் தெருக்கூத்தில் வசனமாகட்டும், நடிப்பாகட்டும், எவ்வித மேல்பூச்சும் இல்லாத நேர்மையான படைப்பாக இருந்தது.

இப்படிப்பட்ட மாற்றுப் படைப்புகளுக்கு நிச்சயம் இடம் இருக்கிறது - ஸ்பேஸஸ், அதர் ஃபெஸ்டிவல் போன்ற மேடைகளில். அதையே நாட்டியரங்கம் மேடையில் காண்பது, தலைவாழை விருந்தில் 'சொத்'தென்று பிட்ஸா பரிமாறிய உணர்வு!

- சாருகேசி

படங்கள் : யோகா



**டான்ஸ் மாஸ்டர் கலா:**

'மானாட மயிலாட' நிகழ்ச்சியில் ஜட்ஜாகத் தீர்ப்பு வழங்கும் கலா மாஸ்டர், சென்னை அண்ணா நகரில் நடனத்துக்காக பள்ளி ஒன்றை நடத்தி வருகிறார். எழுத்தாளர் ரமணிசந்திரனின் தீவிர வாசகி. கடினமான வார்த்தைகளைப் பயன்படுத்தாமல், எளிய தமிழில் ரமணி சந்திரனின் எழுத்துக்கள் இருப்பதே அவர் கதைகளை விரும்பிப் படிப்பதற்குக் காரணம் என்கிறார் இவர். தற்சமயம் கலைஞர் டி.வி.யில் பெண்கள் மட்டுமே பங்கேற்கும் 'பூவா, தலையா' நிகழ்ச்சிக்கு இயக்கு நராகவும் அவதாரம் எடுத்திருக்கிறார்.



## சின்னத்திரையில் பிரபலமாக உள்ள நட்சத்திரங்களின் முகங்களைத் 'திரைக்குப் பின்னால்' சந்தித்தோம். அவர்களின் சுவாரஸ்யமான மறுபக்கம் இங்கே :

**ஜெகன்:** சினிமாவிலும் டி.வி.யிலும் லோக்கல் சென்னை பாஷை பேசும் ஜெகன், நிஜத்தில் நுனிநாக்கில் ஆங்கிலம் பேசுகிறார். மலையாள எழுத்தாளர் பஷீரின் நாடகங்களை இந்தியா முழுவதும் சென்று ஆங்கிலத்தில் நடிக்கிறார். ஃபிஃப்த் எஸ்டேட் எனும் விளம்பர நிறுவனத்தில் காப்பி ரைட்டராகப் பணிபுரிகிறார். விளம்பர நிறுவனத்தில் இருந்து வாழ்க்கைப் பயணத்தைத் தொடங்கியவருக்கு இளைப்பாறுதல் போல, நடிக்கின்ற வாய்ப்பு கிடைத்தது.

''எனது அடையாளம் நடிகன்தான் என்பதை இனி வரும் படங்களில் ரசிகர்கள்தான் சொல்ல வேண்டும்'' என்கிறார் ஜெகன். பைய்யா, நில்-கவனி-செல்லாதே, சிக்குபுக்கு போன்ற படங்கள் ஜெகனின் புதிய பரிமாணத்தைக் காட்டலாம்.

**ரம்யா (தொகுப்பாளினி):** விஜய் டி.வி.யின் பல்வேறு நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கும் ரம்யா, பி.எஸ்.சி. விஷுவல் கம்யூனிகேஷன் படித்தவர். தற்சமயம் எம்.ஏ. மாஸ் கம்யூனிகேஷன் தபால் மூலம் படித்து வருகிறார்.

பரதநாட்டியத்தில் அரங்கேற்றம் செய்தவர். டெலிவிஷன் பிஸியில் நாட்டியத்திலிருந்து கொஞ்சம் ஒதுங்கியிருந்தவர், மீண்டும் சலங்கை அணியப் போகிறார். வருகிற மார்கழி உற்சவங்களில் சென்னை சபாக்களில் ரம்யாவின் சலங்கை ஒலியைக் கேட்கலாம். ஜிம், ஏரோஃபிக்ஸ் போன்ற உடற்பயிற்சிகளில் ஆர்வம் உள்ளவர். டிவி. ஜாக்கி, ரேடியோ ஜாக்கி எனக் கலக்கும் ரம்யாவின் அடுத்த இலக்கு இன்டர்நெட் ஜாக்கியாகவும் கலக்குவது.



# 'சிக்கு புக்கு' ஜெகன் 'பூவா தலையா?' கலா டெலி நியூஸ்



**ப்ரீத்தா ராகவ் :**

அரசி உட்பட பல்வேறு சீரியல்களிலும், சினிமாக்களிலும் நடித்தவர்.

அமெரிக்கப் பல்கலைக்கழகத்தில் எம்.எஸ். கம்யூனிகேஷன் ஸ்டடீஸ் படித்தவர். சில வருடங்களுக்கு முன்பு வரை மென்பொருள் அலுவலகத்தில் டிரெய்னிங் துறையில் இருந்திருக்கிறார். தற்சமயம் டீச்சர்(!) அவதாரம் எடுத்துள்ளார். பல்வேறு கல்லூரிகளுக்கும், கார்ப்பரேட் கம்பெனிகளுக்கும் சென்று தகவல் தொடர்பு, மொழித்திறன், ஜாப் கல்ச்சர் தொடர்பான வகுப்புகளை எடுத்து வருகிறார். மாணவர்களுக்கும், கம்பெனி அலுவலர்களுக்கும் தரும் இந்தப் பயிற்சி தமது உள்ளார்ந்த திறமைகளையும் வளர்த்துக் கொள்ள உதவுகிறது என்கிறார் ப்ரீத்தா.



**ரங்கநாதன் (செய்தி வாசிப்பாளர்):**

பிரபல செய்தி வாசிப்பாளரான ரங்கநாதன், தமது குடும்ப நிறுவனமான 'கிரி டிரேடிங் கம்பெனி'யில் முக்கியப் பொறுப்பில் இருக்கிறார். மனைவியுடன் சேர்ந்து 'சுரங்' எனும் ஸ்டுடியோவைத் தொடங்கி நடத்திவருகிறார்.

தற்போது பிரபலமாக இருக்கும் விளம்பரங்களில் சுமார் இருபது சதவிகித விளம்பரங்கள் இந்த ஸ்டூடியோவில் பதிவு செய்யப்பட்டவைதானாம். சிவ ஸ்தோத்திரம், தேவி ஸ்தோத்திரம், கிருஷ்ண ஸ்தோத்திரம் எனப் பல்வேறு பக்திப் பாடல்களுக்கு இசையமைத்துப் பாடியுள்ளார் ரங்கநாதன். சுமார் பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட விளம்பரங்களுக்குப் பின்குரல் கொடுத்துள்ளார்.

- ராகவ்குமார்

# கைக்குக் கிட்டாத தோளெருட்டி!

''**தா**மாஜி கொடுக்க வேண்டிய பணத்தை விட்டலனே மாறுவேடத்தில் வந்து மன்னனிடம் கொடுத்து அதற்குரிய ரசீதையும் பெற்றான் என்பதைக் கேள்விப்பட்டதும் உங்களுக்கு என்ன தோன்றுகிறது?'' என்று கேட்டார் ராமநாதன்.

''அந்தக் காலத்தில் கறுப்புப் பணம் இல்லை. எல்லாவற்றுக்கும் ரசீது கொடுத்து இருக்கிறார்கள்'' என்று ஜருகண்டி கூறியதும், ராமநாதன் அவனைக் கொஞ்சம் எரிச்சலாகவே பார்த்தார்.

''தாமாஜியின் பக்தி, பக்தனுக்கு உதவும் பாண்டுரங்கனின் இயல்பு இதில் எதுவுமே உனக்குத் தோன்றவில்லையா?'' என்று ராமநாதன் கேட்க, ''தோன்றாமல் இருக்குமா? சும்மா ஒரு நகைச்சுவைக்குச் சொன்னேன்'' என்று அசடு வழிந்தான் ஜருகண்டி.

''நாட்டில் பஞ்சம், ரசீது இந்த இரண்டு விஷயங்கள் போசலபாவாவின் வாழ்விலும் நடந்திருக்கின்றன'' என்ற ராமநாதன், போசலபாவாவின் கதையைக் கூறத் தொடங்கினார்.

**ப**ண்டரிபுரத்தின் அருகே பால்காடு என்ற சிறிய ஊர் இருந்தது. வளம் நிறைந்த ஊர் அது. விவசாய செல்வந்தராக அங்கே விளங்கியவர்தான் போசலபாவா. தீவிர விட்டல பக்தராக விளங்கியது அவர் மட்டுமல்ல; அவர் மனைவி மமதாபாயும்தான்.

ஒவ்வொரு மாதமும் ஏகாதசி அன்று போசலபாவாவும், அவர் மனைவியும் விரதம் இருப்பார்கள். அன்று முழுவதும் பாண்டுரங்க பஜனையைச் செய்து இன்புறுவார்கள். அன்று மாலை கிளம்பி பண்டரிபுரம் செல்வார்கள். அதற்கு அடுத்த நாளான துவாதசியன்று பலருக்கும் அங்கு அன்னதானம் செய்வார்கள்.

இந்த நற்செயலுக்கு ஓர் இடையூறு உண்டானது. அந்தப் பகுதியில் கடும் பஞ்சம் தோன்றியது. தம் களஞ்சியத்தில் உள்ள தானியங்களையெல்லாம் கஞ்சியாக மாற்றி ஏழைகளுக்கு அளித்தார் போசலபாவா. நாளடைவில் அதற்கும் பஞ்சம் வந்தது.

வேறொரு கவலையும் போசலபாவாவை வாட்டியது. 'இன்னும் சில நாட்களில் ஏகாதசி வருகிறதே. பண்டரிபுரத்துக்கு வேண்டுமானால் செலவின்றி கால்நடையாகவே சென்றுவிடலாம். ஆனால் அன்னதானத்துக்கு என்ன செய்வது?' என்று மனத்துக்குள் புழுங்கினார் போசலபாவா.



குணவதியான மனைவி, ''வீட்டில் இருக்கும் கோடாரி

யையும் மண்வெட்டியையும் எடுத்துக் கொள்ளுங்கள். காட்டுக்குச் சென்று விறகு வெட்டி வாருங்கள். அந்த விறகை விற்றுக் காசாக்கலாம். அதைக் கொண்டு நம்மால் முடிந்த அன்னதானம் செய்யலாம்'' என்றாள்.

மரம் வெட்டிப் பழக்கம் இல்லாத கைகள். எனவே ஓரளவு மரத்தைத்தான் போசலபாவாவால் வெட்ட முடிந்தது. ஒரு வழியாகக் கிடைத்த சிறிய தொகையில் சோளமாவை வாங்கிக்கொண்டு புறப்பட்டார் போசலபாவா. உடல் நலமின்மையால் வீட்டிலே தங்க வேண்டிய கட்டாயம் மமதா பாய்க்கு. போதிய உணவு கிடைக்காததுகூட அவளது உடல்நிலைக்கு ஒரு முக்கியக் காரணம்.

பண்டரிபுரத்தில் பஞ்சம் படரவில்லை. எனவே அன்னதானம் குறைவின்றி நடந்து கொண்டிருந்தது. சோளமாவை வைத்துக் கொண்டு தானம் செய்ய போசலபாவா தயாராக இருந்தும், யாருமே அவர்புறம் வருவதாக இல்லை.

முன்தினமும் கடும் விரதம். இன்றும் விருந்தினருக்கு உணவளித்த பிறகுதான் சாப்பிட முடியும். ஆனால் விருந்தினரோ வருவதாக இல்லை. போசலபாவாவுக்கு, கண்கள் இருட்டிக்கொண்டு வந்தன. அந்த அரைகுறை மயக்க நிலையில் ஒரு முதியவர் தம்மருகே வருவதை அவரால் பார்க்க முடிந்தது. அந்த முதியவரின் அருகே அவரது மனைவி.

போசலபாவாவுக்கு சந்தோஷமும் துக்கமும் ஒருசேர எழுந்தன. ஒருவருக்கே போதாத இந்த சோள மாவை, இருவருக்கு அளிக்கவேண்டி இருக்கிறதே என்ற துக்கம்.

அவரது தயக்கத்தை உணர்ந்து கொண்டவர் போல் அந்த முதியவர், ''கொடு. இதற்கு முன்னால் பலமுறை உன்



### அபங்க அமுதம்

தேவ க்யா கோணீ தேவ க்யா கோணீ
ஆயிதா ஆலா கர புஸோனி
தேவ ந லகே தேவ ந லகே
ஸாண்டவணேசே ருதலே ஜாகே
தேவ மந்தலா தேவ மந்தலா
பாவ புடாலா காய கரு
தேவ க்யா புகா தேவ க்யா புகா
ந லகே ருகா மோல காஹீ
துபளா துகா பாவஹீன
உதார தேவ கேதலா ருண

- துகாராம்

'ஒவ்வொரு வீடாகச் சென்று தெய்வம் யாருக்கு வேண்டும் என்று கேட்டேன். தங்கள் வீடு உலக விஷயங்களால் நிறைந்திருப்பதால் தெய்வத்துக்கு இடம் இல்லையே என்று எல்லோரும் கூறிவிட்டனர். விலை எதுவும் தரவேண்டாம் இனாமாகவே தெய்வத்தை எடுத்துக் கொள்ளுங்கள் என்றேன். அதற்கும் வேண்டாம் என்று கூறிவிட்டனர். நான் பலமற்றவன். தெய்வத்தைக் கைமாற்றாக வாங்கி வந்து தீர்க்கமுடியாத கடனாளி ஆகிவிட்டேன்.'

அன்னதானத்தில் கலந்துகொண்டு வயிறாரச்சாப்பிட்டு இருக்கிறேன். இப்போது உன்னிடம் சோளமாவுதான் இருக்கிறதென்றால் அதுவும் எனக்குப் பிடித்தமானதுதான்'' என்றார்.

**சோளமாவை வைத்துக்கொண்டு தானம் செய்ய போசலபாவா தயாராக இருந்தும் யாருமே அவர்புறம் வருவதாக இல்லை.**

வணக்கத்துடன் போசலபாவா சோளமாவை அளிக்க, ''கொஞ்சம் சுள்ளி பொறுக்கி வா'' என்றார் அந்த முதியவர். அப்படி வந்து சேர்ந்த சுள்ளியைக் கொண்டு அடுப்பு மூட்டினார் முதியவர். கடைக்குச் சென்று, வேண்டிய சில பொருட்களை வாங்கி வந்தார் முதியவரின் மனைவி. பிறகு முதியவரும் அவர் மனைவியும் அந்த சோள மாவை ரொட்டியாக்கினர்.

அந்த ரொட்டியில் ஒன்றை எடுத்து வாயில் போட்டுக்கொண்ட முதியவர், தம் மனைவியிடம், ''அடடா, என்ன சுவை! என்ன சுவை! இப்படியொரு அற்புதமான சோள ரொட்டியை இதற்கு முன்னால் நீ கூடச் செய்ததில்லையே'' என்று கூற, முதியவள் நகைத்துக் கொண்டாள். அது பக்திச் சுவை என்பது அவளுக்குத் தெரியாதா என்ன? பின் தன் கணவன் கொடுத்த ஒரு ரொட்டியைத் தானும் உண்டாள்.

''நாங்கள் துவாதசி அன்னதானத்தை நிறைவு செய்து விட்டோம். மீதமிருக்கும் இந்த ரொட்டிகளை நீ சாப்பிட்டுவிட்டு வீட்டுக்கும் எடுத்துப் போ'' என்றார் முதியவர். அவர் நீட்டிய கரத்தில் பத்து ரொட்டிகளுக்கும் மேலே இருந்தன!



# Followup

**ஃப்ளாஷ்பேக்:** கடந்த வாரம் கல்கி இதழில் பாட்னாவிலிருந்து மீட்டு சேவாலயாவுக்கு அழைத்துவரப்பட்ட சிறுவன் சாய் பற்றிய ரிப்போர்ட் வெளியானது. கடந்த திங்கட்கிழமையன்று சாய், அவனுடைய தந்தை கோடீஸ்வர ராவிடம் ஒப்படைக்கப்பட்டான். ஆன்டி-கிளைமேக்ஸாக ஒரு தகவல். சாய், தமிழ்நாட்டைச் சேர்ந்த சிறுவனே இல்லை. ஆந்திராவில் அனகாபல்லி என்ற ஊரைச் சேர்ந்தவன். மேலும் விவரங்கள் இதோ:

**தேடல் படலம் :** சேவாலயாவுக்கு வந்து சேர்ந்தவுடன், அதன் நிறுவனர் முரளிதரன், பையனின் பெற்றோர்களைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் இறங்கினார். சேவாலயா பள்ளி ஆசிரியர் ஒருவர் சிறுவனிடம் பேசி மேலும் தகவல்கள் அறிய முற்பட்டார். எதேச்சையாக, பையனுக்குத் தெலுங்கு தெரியும் என்பது தெரியவர, தெலுங்கு தெரிந்த ஆசிரியர் அவனுடன் பேசி இருக்கிறார். அப்போது தான், அவன் ஆந்திராவின் (அனகாபல்லி) ஸ்ரீநகரைச் சேர்ந்தவன் என்பது தெரியவந்தது.

சேவாலயாவில் சாய் பற்றிய புதிய தகவல்கள் தெரிந்தபின், இணையத்தில் கூகுள் சர்ச் வழியாக தேடி, தகவலை உறுதிப்படுத்திக் கொண்டு, பின்னர் அந்த ஊர் போலீஸ் ஸ்டேஷனுடன் தொடர்பு கொண்டார்கள். பீகார் போலீஸும் சேவாலயாவில் இருக்கும் மகனிடம் பெற்றோரைப் பேசச் செய்தனர். உணர்ச்சிப் பெருக்கான அந்த உரையாடலைத் தொடர்ந்து உள்ளூர் போலீசுடன், கோடீஸ்வர ராவ் கடந்த திங்களன்று சேவாலயாவுக்கு வந்து, தன் மகனை அழைத்துச் சென்றார்.

**எப்படிப் போனான்:** சாய் வீட்டுக்கு அருகில் ஒரு ரயில்வே ஸ்டேஷன் உண்டு. அங்கே நின்றுகொண்டிருந்த ஒரு ரயிலில் விளையாட்டாக சாய் ஏற, அந்த ரயில் புறப்பட்டுவிட்டது. பீகார் வந்து சேர்ந்த அவன், முரடன் ஒருவன் கையில் சிக்கிக் கொள்ள, ஒரு வீட்டில் அடைத்து வைக்கப்பட்டான்.

**அப்பாவும் மகனும்! :** ''பையன் காணாமல் போன அன்று, இரவு முழுக்கத் தூக்கமில்லை. எங்கேயாவது ஏழெட்டு வயது பையன் விபத்திலோ, மருத்துவமனையில் கவனிப்பாரில்லாமலோ இறந்த செய்தி வந்தால், அது எங்கள் மகனா என அடையாளம் காட்டக் கூப்பிடுவார்கள். 'ஐயோ! கடவுளே! அது சாய் ஆக இருக்கக் கூடாதே' என்று கடவுளை வேண்டிக்கொண்டே

## "கடவுளே... அது சாய் ஆக இருக்கக்கூடாது!"



போவேன்'' என்று சிறுவனின் தந்தை சொல்லும்போது, அவர் கண்கள் பனிக்கின்றன.

**மகனின் மூலம் மனைவி! :** ''மகனுடன் ஊருக்குப் புறப்படும்போது, 'மகன் காணாமல் போனதிலிருந்து என் மனைவி மனமொடிந்து, உடல் நலமின்றி இருக்கிறாள். நீங்கள் என் மகனை மட்டும் எனக்கு மீட்டுத் தரவில்லை; என் மனைவியைக் கூட மீட்டுத் தந்திருக்கிறீர்கள்' என்று கோடீஸ்வர ராவ் கூறியது என்னை மிகவும் நெகிழவைத்து விட்டது'' என்கிறார் முரளிதரன்.

தகவல் : **கௌதம் ராம்**

"உலகின் ஒவ்வொரு பகுதியிலும் பத்திரிகையாளர்களைச் சிறையில் போடுவதும், அவர்களை ஆட்சியாளர்கள் கொடுமைப்படுத்துவதும் நடந்துகொண்டுதான் இருக்கிறது. கவலை தரத்தக்க இந்தச் சூழலுக்கு மிகச் சரியான உதாரணமாக இருக்கிறார் ஸ்ரீலங்காவைச் சேர்ந்த ஜே.எஸ். திசைநாயகம்" - அமெரிக்க ஜனாதிபதி பராக் ஒபாமா சமீபத்தில் சொன்னது இது. ஒபாமா குறிப்பிட்ட திசைநாயகம், ஸ்ரீலங்காவில் பயங்கரவாதத் தடைச்சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டு கொழும்பு உயர்நீதி மன்றத்தால் இருபது ஆண்டுகள் தண்டிக்கப்பட்டிருக்கிறார். அதுவும் கடுங்காவல்! ஒரு சுதந்திரமான பத்திரிகையாளரை சிறையில் தள்ளியதற்கு உலகெங்கிலும் கண்டனக் குரல்கள் கேட்கின்றன.



* ராஜ பக்ஷே

**"ஜெயவர்த்தனே ஆட்சியின் போது, ராஜபக்ஷேவுடன் இணைந்து மனித உரிமைக்காகப் போராடியவர் கே.எஸ்.திசைநாயகம்!"**

நாற்பத்தைந்து வயதாகும் தமிழரான ஜெயப்பிரகாஷ் சிற்றம்பலம் திசைநாயகம் செய்த குற்றம்தான் என்ன? அவர் ஆசிரியராக இருக்கும் 'நார்த் ஈஸ்டர்ன் ஹெரால்டு' என்ற பத்திரிகையில் இரண்டு கட்டுரைகள் எழுதியதற்காக, அவரைக் கொடுங்காவலுக்கு ஆட்படுத்தியிருக்கிறது ராஜ பக்ஷே அரசு. விடுதலைப் புலிகளுக்கும், இராணுவத்துக்கும் இடையே நடந்த யுத்தத்தில் ஒன்றும் அறியாத அப்பாவி மக்கள் எப்படிப் பாதிக்கப்படுகிறார்கள் என்பதையும், மனித உரிமைகள் எப்படி பறிக்கப்படுகின்றன என்பதையும், தமிழர்கள் இராணுவத்தால் நடத்தப்படும் மோசமான நிலை குறித்தும் விளக்கும் கட்டுரைகள் அவை. இந்தக் கட்டுரைகள் இன அமைதிக்குக் கேடு விளைவிப்பதாகவும் வன்முறையை ஊக்குவிப்பதாகவும் சொல்லி, பயங்கரவாதத் தடுப்புச் சட்டத்தில் 'உள்ளே' தள்ளிவிட்டது ராஜபக்ஷே அரசு. இவரோடு பத்திரிகையைப் பதிப்பித்த ஜசிகரனும், அவர் மனைவி வளர்மதியும் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். திசைநாயகம், 1980களில் ஜெயவர்த்தனே ஆட்சியின்போது, அப்போது எதிர்க்கட்சியில் இருந்த இதே ராஜபக்ஷே

# பத்திரிகை



# இலங்கைப் பிரச்னை

யுடன் இணைந்து மனித உரிமைகளுக்காகப் பாடுபட்டவர் என்பதை அறியும்போது நொந்து கொள்வதைத்தவிர வேறு வழியில்லை. தில்லி நேரு பல்கலையில் பட்டமேற்படிப்பு முடித்தவர் திசை நாயகம்.

'டிஸ்ஸா' என்று நண்பர்களால் அன்புடன் அழைக்கப்படும் திசைநாயகம் ஸ்ரீலங்கா அடக்குமுறைக்கு சமீபத்திய உதாரணம்தான். அந்த நாட்டில், யாருடைய ஆட்சி நடந்தாலும், பத்திரிகையாளர்களை - அதுவும் தமிழ்ப் பத்திரிகையாளர்களைக் கொலை செய்வதும் கொடுமைப் படுத்துவதும் நடந்து கொண்டுதானிருக்கிறது. பத்திரிகையாளர்கள் நிர்மலாராஜன், சுகிர்தராஜன், சிவராம் உட்பட முப்பதுக்கும் மேற்பட்ட தமிழ்ப் பத்திரிகையாளர்கள் 2004 முதல் ஸ்ரீலங்காவில் கொலை செய்யப்பட்டிருக்கிறார்கள். உதயன், சுடரொளி ஆகிய பத்திரிகைகள் இராணுவத்தால் அழிக்கப்பட்டிருக்கின்றன. கிட்டத்தட்ட அறுபது பத்திரிகையாளர்கள் மற்றும் பத்திரிகை அலுவலக ஊழியர்கள், பல்வேறு குற்றச்சாட்டுக்கள் சுமத்தப்பட்டு சிறையில் வாடுகிறார்கள். பத்திரிகை உல



* ஜே.எஸ். திசைநாயகம்

# சுதந்திரம்?

"இரண்டு கட்டுரைகள்... இருபது ஆண்டுகள் சிறை!"



கம் அங்கே மூச்சுத் திணறிக் கொண்டிருக்கிறது. கடுமையான தணிக்கை அமுலில் இருப்பதால், மக்கள் உண்மைகளைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு மறுக்கப்படுகிறது. ஒரு சில ஆங்கில தினசரி பத்திரிகையாளர்களைத் தவிர மற்ற சிங்கள மொழிப் பத்திரிகையாளர்கள் இந்த அவல நிலை குறித்து கண்டும் காணாமலும் இருக்கிறார்கள். பாதிக்கப்படுவது தமிழ்ப் பத்திரிகையாளர்கள்தானே... அந்த அளவுக்கு அங்கே இனத் துவேஷம்! மேல் முறையீட்டுக்கு திசைநாயகம் குடும்பம் போயிருக்கும் நிலையில், இந்தத் துவேஷம் நீதிதேவன்களையும் பிடிக்காமல் இருக்க வேண்டும்.

**- கௌசி**

# சீதைவனம்

நீண்ட நேரமாகப் படுக்கையில் கிடந்தாலும், அழகம்மாவுக்கு உறக்கம் வரவில்லை. துக்கம் மனசைத் துவட்டி யெடுத்தது.

பத்து வருட தாம்பத்ய வாழ்க்கையில், தன் கணவனால் எத்தனையோ கொடுமைகளுக்கு ஆளான போதிலும், இப்படியொரு வலியை அவள் ஒரு போதும் உணர்ந்ததில்லை. 'ஒரு நாளுமில்லாத திருநாளாய் எப்படி இவரால் இப்படிக் கேட்க முடிந்தது? வாய் தவறிய வார்த்தைகளாய் இருக்குமோ? நன்கு யோசித்துப் பார்த்தால்... அப்படித் தோன்றவில்லையே! உள்ளத்துக்குள்ளிருந்து கிளம்பிய சதி சண்டாளத்தனமும் கள்ள சந்தேகமும் சமமாய்க் கலந்த வார்த்தையல்லவா அது? கரைப்பார் கரைத்த கல்லா, தன் புருஷன் உள்ளம்? இல்லை இவராகவேதானா... எவ்வகையில்...?'

ஆனால், இவளுக்கு வாய்த்த மாமியார் மறுதாயார் போல. தன் தாய் உயிரோடு இருந்தால்கூட இப்படித் தாங்குவாளா? நேசமும் பாசமும் இவள் மனசு குளிரக் குளிரக் காட்டுவாளா?

கல்யாணமான புதிதில்... தெரியாத வேலைகளை, எவ்வளவு பக்குவமாய், பரிவாய்ச் சொல்லிக் கொடுத்து, இரண்டு பிரசவத்துக்கும் பிறந்தகம் போகவிடாமல் மாய்ந்து... மாய்ந்து... கவனித்து...

''நீயேன் பெத்தவளாட்டம் புள்ளைப் பேறு பார்க்கறே?'' பக்கத்து வீட்டுப் பெண்கள் கேட்க,

''அம்மா இல்லாத பொண்ணுடி. அண்ணிக்காரி அக்கறையா கவனிப்பாள்ங்கறது என்ன நம்பிக்கை? ஒரு நொட்டைச் சொல்லு சொல்லித்தானே பிரசவம் பார்ப்பா... அப்பனுக்கும் சம்பாத்தியமில்லை. அண்ணனும் பொண்டாட்டி பின்னாடி... இந்த நேரத்திலே அவளுக்கு மனத் திருப்தி வேணும். அது அங்கே கெடைக்காதுன்னு எனக்குத் தெரிஞ்சும் அனுப்பினா... நான் பாவியில்லையா?''

இப்போது நினைத்தாலும் அழகம்மாவுக்கு உள்ளம் நெகிழ்ந்து, உரோமக் கால்கள் சிலிர்க்கின்றன.

''அழகம்மா! இனிமேல் உம் புருஷனை நம்பிப் பிரயோசனம் இல்லை. எந்நேரமும் குடியும் சீட்டாட்டமும்தான். இனி நாம தான் ஒத்தாசையாயிருந்து குடும்பத்தை நடத்தி, குழந்தைகளைக் காப்பாத்தியாகணும்.

ஒரு ஆட்டுக்குட்டியை வாங்கிக் கொடுடி... குழந்தைகளைப் பார்த்

**அகல்யா**

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை - 5



திட்டே மேய்ச்சாக்க... பலனாகும். ஏதோ அவசரத்துக்கு வித்தாக்கப் பணமாகும். இது கோழி வித்தது; வேப்பமுத்து போட்டது; நெலக்கடலை உரிச்சது...'' என்று அத்தையால் முடிந்த பங்களிப்புக்கள்...

அப்பேர்ப்பட்ட பாசமான மாமியாரிடம் நாசமாய்ப்போன தன் புருஷன் உதிர்த்த மோசமான வார்த்தைகளைப் பெயர்த்து அவள் மீது பதித்ததை நினைக்கையில்... பச்சைப் புண்ணில் இண்ட முட்கள் பட்டு இடறுகிற இம்சை...

இதை எப்படி நிவர்த்தி செய்வது? 'ஏதோ உங்க மகன் மேல விழுகிற கோபம் வாய் தவறி உங்கள் மீது.

மாமியாரிடம் மனமுருகி... மன்னிப்பு கேட்கலாமா? அவளுக்கு அந்தக் கவலை மனதில் பெரும்புயலென மையங்கொண்டு அலைக்கழிக்கிறது, உறங்கவிடாமல் அழ வைக்கிறது.

திடீரென எழுந்து சுவரோடு சாய்ந்து உட்கார்ந்தாள். அந்தக் கிராமமே ஆழ்ந்த நிசப்தத்தில்...

**கா**லையில் சமையலை முடித்து, குழந்தைகளைச் சாப்பிட வைத்து, பள்ளிக்கு அனுப்பினாள். அவளுக்குச் சாப்பிட மனம் வரவில்லை. இன்று திங்கட்கிழமை. வார முதல்நாள். ஏனோ கட்டட வேலைக்குப் போக மனசு வரவில்லை.

கயிற்றையும் அரிவாளையும் எடுத்துக் கொண்டு பக்கத்து வீட்டு அருக்காணியோடு விறகுக்குப் போனாள். எப்ப விறகு சேர்க்க வந்தாலும், கூட வந்தவர்கள் பொறாமைப்படுமாறு கனமான நல்ல தடிமனாய், கட்டை கட்டையாய் விறகு சேர்ப்பாள். ஒரு ஆண்மகனின் வீரமாய், காய்ந்த கருவேல மரத்தின் அடிப்பாகத்தில் அரிவாளை வீசுவாள்.

இன்று அவளால் அப்படியெல்லாம் விறகு சேர்க்க முடியவில்லை. வந்தோமென்று ஒப்புக்குக் கொஞ்சம் சேர்த்துக் கட்டி வைத்துக்கொண்டாள்...

நேற்றிரவிலும் காலையிலும் எதுவும் சாப்பிடாமல், சரியாகத் தூங்காமல், உடம்பு அசதியும் சோர்வுமாக இருந்தது. அருக்காணியிடம், ''கொஞ்ச நேரம் கண்ணசர்றேன்'' என்று சொல்லிவிட்டு, சும்மாட்டுத் துணியை விரித்து அருகேயிருந்த ஆலமர நிழலில் படுத்தவள், சிறிது நேரம் கோழித் தூக்கம் தூங்கிக் கலைந்தாள்.

**நே**ற்று முன்தினம் சனிக்கிழமை சம்பளநாள். இரவு கான்கிரீட் போடும் வேலையிருப்பதால் அங்கேயே தங்க வேண்டியிருந்தது. வேலை முடிந்து, எல்லோரும் உழைப்பின் அலுப்பால் அடித்துப் போட்டதுபோல் உறங்கிக் கொண்டிருக்க, மேஷன் ரத்தினவேல் மட்டும் அழகம்மாவின் காலடியில் அவளது கெண்டைக்காலை வருடியபடி, ஏதோ புழுப்பூச்சி பூரான் ஊர்வது போலிருக்க... விழிப்பு தட்டி எழுந்தாள்.

ரத்தினவேல், காமமாய் வழிந்தான். நூறு ரூபாய்த் தாளை எடுத்து நீட்டினான்.

அழகம்மாள் ஏற்கெனவே அவனைக் கவனித்திருக்கிறாள். கலவை அள்ளும் போது கள்ளத்தனமாய்ப் பார்ப்பதும், செங்கல் மட்டக்கோல் எடுத்துத் தருகையில் கைகளைத் தடவுவதும்...

இத்தனைக்கும் இவன் கல்யாணமாகி, குழந்தைகள் குடும்பமாயிருப்பவன்தான்.

பணத்துக்காக மானத்தை விற்பவளென்று அற்பமாய் நடக்கப் பார்த்தவனை, தன் உடல் பலத்தை ஒன்று திரட்டி ஓங்கி விட்டாள் உதை. அவன் அடிவயிற்றைப் பிடித்தபடியே அலற, அருகே கிடந்த மட்டக்கோலை எடுத்து முதுகில் இரண்டு போடு போட்டாள்.

அவள் போட்ட கூச்சலில் படுத்திருந்தவர்கள் எழ, விவரம் சொன்னாள். மேஸ்

**பா**னுசந்தரை யாரும் அவ்வளவு சீக்கிரம் மறந்துவிட முடியாது. 'நீங்கள் கேட்டவை', 'கண்ணே கலைமானே...' போன்ற படங்களின் மூலம் தனித்த கவனத்தைப் பெற்றவர். தெலுங்கின் முன்னணி நடிகர். இவரது மகன் ஜெயந்த் கதாநாயகனாக அறிமுகமாகும் படம்தான் மார்கழி 16. படத்தை இயக்கும் கே.ஸ்டீபன், இயக்குநர் ஏ.வெங்கடேஷிடம் பதின்மூன்று படங்களில் உதவி இயக்குநராகப் பணி புரிந்தவர். 'படத்தோட கதை என்னங்க?' என்று கேட்டால், ''காதல்தான் கதை'' என்கிறார். அதுக்கு ஏன் மார்கழி - 16ன்னு

3

பேர் வெச்சீங்கன்னு கொக்கி போட்டால், ''மாதங்களிலே ரொம்ப வசீகரமான மாதம்னா அது மார்கழிதான். அப்ப எங்க பார்த்தாலும் இயற்கையோட சோபிதம் ஜொலிக்கும். கண்ணதாசன்கூட காதலியை வர்ணிக்கும்போது மாதங்களில் அவள் மார்கழின்னு பாடியிருப்பார். என்னோட ஹீரோயினுக்கு 16 வயசு. அதையும் சேர்த்து மார்கழி - 16ன்னு பேர் வெச்சேன்'' என்கிறார்.

**- சத்யா**



திரி, ''நாளைக்குச் சம்பளம் வாங்கினதும் நீ வேலைக்கு வர வேண்டாம்'' என ரத்தினவேலை எச்சரித்து, விஷயத்தைப் பெரிசுபடுத்த வேண்டாமென்று அழகம்மாவையும் கேட்டுக்கொண்டார்.

சம்பளம் வாங்கிக்கொண்டு, ஞாயிற்றுக் கிழமை நம்பியூர் சந்தையில் பெரிய காதுப் பை வாங்கி, காய்கறி, குழந்தைகளுக்குத் தீனி, மாமியாருக்கு வெற்றிலை பாக்கு, கணவனுக்கு கணேஷ் பீடிக்கட்டு, சாப்பாட்டுச் போசியில் ஆட்டுக்கறி... என்று வாங்கிக் கொண்டாள்.

வீடு வந்து காரைத் துகள் நசநசப்பு போக பச்சைத் தண்ணீரில் குளித்து, அடுப்பைப் பற்ற வைத்து, சமையலை முடித்து குழந்தைகளுக்கும் மாமியாருக்கும் போட்டாள். ஆனால், கணவனுக்குப் போட்டு வைத்தது மட்டும் அப்படியே ஆறிப்போய், பருக்கைகள் முள்ளாய்க் காய்ந்து...

''ஏங்க சாப்பிடலையா? கறிக்கொழம்பைச் சூடா சாப்பிட்டாத்தானே...'' வார்த்தைகளை முடிக்கவில்லை.

''ஏண்டி ராவெல்லாம் எவனோடவோ... அந்தப் பணத்துலே கறி ஆக்கிப் போடுவே... நான் திங்கணுமா? பொம்பளை வளர்த்திருந்தாக்க பொறுப்பாயிருப்பே...'' இன்னும் என்னென்னவோ பேசிவிட்டான்.

''எங்கம்மா நடத்தையைச் கொச்சைப்படுத்தித் திட்டறியே... உங்கம்மாவை நான் திருப்பிக் கேட்க, வெகு நேரமாயிடுமா? நீ பொம்பளை வளர்ப்புத் தானே... இப்படித் தறுதலையா திரியறே?''

''ஊர்ல இத்தனை பொம்பளைங்க சித்தாள் வேலைக்குப் போறப்போ... உன்னை மட்டும் ஏன் கூப்பிட்டான்? ராத்திரியிலே நடந்த சம்பவம் பகல்லே தெரியாதா என்ன? உங்களை, வேலைக்கு டவுனுக்கு ஏத்திட்டுப் போறானே டெம்போ டிரைவரு... குடிவெறியிலே எல்லாமே எங்கிட்டே உளறிட்டான்.''

''**சி**த்த நேரம் கண்ணசர்றேன்னு வந்தவ, இப்ப தூங்காமே அப்படியென்ன யோசனை?''

அருக்காணி கேட்கவும், நேற்றைய நினைவுகளிலிருந்து விடுபட்டு, வீடு வந்து விறகுச் சுமையைப் பட்டிக்குள் போட்

டாள்.

கை கால்கள் அலம்பிக்கொண்டு சோத்துச் சட்டியைப் பார்க்க, ஆக்கி வெச்சது அப்படியேயிருந்தது! மாமியார் சாப்பிடவில்லையென்று அறிந்த மனத்தில் ஆதங்கம் சூழ்ந்தது.

கேட்க மனம் வரவில்லை. முகத்தில் விழிப்பதற்கே கூச்சமாய்...

'உஸ்' அப்பாடாவென்று ஒட்டுத் திண்ணையில் தலைசாய்ந்தாள். கூடை, முறங்களை மாட்டுச் சாணத்தால் மெழுகிக் கொண்டிருந்த மாமியார், அதை அப்படியே போட்டுவிட்டு,

''ஏ... அழகா! சோறு திங்கலை. அவன் கெடக்கறாண்டி. குடிகாரக் கழுதை

குக்கூ...

**நீ அம்மா செல்லமா?**
**அப்பா செல்லமா?**
**என்றேன் குழந்தையிடம்**
**மெல்லமா சொன்னது**
**நான் சாமியோட செல்லம்**

-சி.பி.செந்தில்குமார்



வார்த்தை சொல்லிடுச்சாம்.

இவ பட்டினியிருந்து சாகறாளாம்.''

''அத்தை நேத்து உங்க மகன் மேல உள்ள கோபத்துலே உங்களை அப்படிக் கேட்டிருக்கக் கூடாது...''

சொல்லும்போதே குரல் கமறி, விழிகளில் ஈரம் சுரந்தது.

''அழகா... ஆம்பிளை அப்படித்தான் எடக்கு மொடக்காயிருப்பான். பொம்பளைங்கதான் அனுசரிச்சுப் பொறுத்துப் போகணும்பாங்க. ஆனா நம்ம விதி அப்படியில்லையே! நேத்து உம் புருஷன் உன்னைக் கேட்ட மாதிரி பல வருஷங்களுக்கு முன்னாலே... நான் பெத்தது ரெண்டும் குழந்தைகளாயிருக்கறப்போ... இந்த வீடு நெலக் குடிசை... தென்னோலை கீத்து வழியா புழுப்பூச்சிக உள்ளே வரும். ஒரு நாள் தங்கச்சிப் பாப்பாவைப் பார்த்துக் கடான்னு சொல்லிட்டு... கெணத்துக்குத் தண்ணி சேந்தப் போனேன். குடிசைக் குள்ளே நுழையறப்போ... பாம்பு கட்டுவிரியன்... கொழந்தைங்க ரெண்டும் தூங்குதுங்க. பக்கத்து வீட்டுப் பங்காளியைக் கூப்பிட்டு அடிக்கச் சொன்னேன். பாம்பு தப்பிச்சிடுச்சு. உங்க மாமனார் சந்தேகத்திலிருந்து தப்பிக்க முடியலை. பாம்பு கடிச்சு பெத்த புள்ளைங்க செத்தாலும் பரவாயில்லை. கட்டின பொண்டாட்டி தொலைஞ்சாலும் தேவலை. அடுத்த வூட்டு ஆம்பிளை குடிசைக்குள்ளாற நுழைஞ்சது குத்தம். மகா தப்பு. அதோட மட்டுமா உள்ளங்கையிலே கற்பூரத்தைப் பத்த வெச்சு... கட்டையைப் பிளந்து தணல் மூட்டி... தீக்கங்குகளை மூணு தடவை அள்ள வெச்சு... நான் பத்தினிதான்னு நிரூபிக்கச் செஞ்சு... அவன் பெத்த மகன் எப்படியிருப்பான்? அப்பனுக்குப் புள்ளை தப்பாமதானே?

அந்தக் காலம் பொறுத்துக்கிட்டுத்தான் பொழப்பு நடத்த வேண்டியிருந்தது. நீ அப்படியிருக்கணுமா? இனியும் அவன் கொடுமைப்படுத்தினா... நானே சொல்லித் தர்றேன். நீ பொம்பிளை போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் பிராது கொடுத்து உள்ளே தள்ளு.''

சொன்ன மாமியார் சட்டியிலிருந்து சோற்றை வட்டிலில் போட்டு, மருமகன் முன் வைத்து சாப்பிடச் சொன்னாள்.

அழகம்மாள், திடீரென்று மாமியார் மடி சாய்ந்து விசும்பத் தொடங்கினாள்! ○

# ஒரு காலை

பாவண்ணன்

புறப்படும் நேரம்
வழக்கமான பேருந்தில்
எல்லாருமே இருந்தார்கள்
தாடிக்காரக் கிழவர்
திருநீறு சுடர்விடும் மீசைக்காரர்
கண்ணாடியணிந்த கல்லூரிப்பெண்கள்
தலைமுடி கலைந்த ஜிப்பாக்காரன்
மண்வெட்டி இரும்புச்சட்டிகளுடன்
பின்னிருக்கை பிடிக்கும்
சகோதரர்கூட்டம்
மல்லிகைச்சரம் தொங்கும் பின்னலுடன்
கலகலப்பாகப் பேசும் இளம்பெண்
கழுத்தில் சுடர்விடும்
அட்டிகை காசுமாலையை
தொட்டுத்தொட்டுப் பார்க்கும் அம்மா
நகம் கடித்து
தனக்குத்தானே பேசுவதுபோல
தெருவோரம் பார்த்தபடி
கைப்பேசியில்
விவரம் சொல்லும் விற்பனையாளன்
காலைப் பத்திரிகையை விரித்து
குறுக்கெழுத்துப்புதிர்
விடுவிக்கும் நண்பர்
தொலைக்காட்சித் தொடர்களின்
கதைவிமர்சனம் செய்யும் பெண்கள்
காதோரம் முளைத்தெழுந்து
மார்பின்மீது பற்றிப் படரும்
ஒலிவாங்கிக்கம்பியை உருட்டி
சிரித்தும் சினந்தும் கிசுகிசுக்கும் பெண்
புத்தகப்பை சுமந்த சிறுமிகள்
எல்லாருமே இருந்தார்கள்
புன்னகையும் நாணமும் படர
ஒவ்வொரு நாளும்
கடைசிநொடியில் வந்து
முதல் இருக்கையில் சரிந்தமர்ந்து
ஜன்னல் வழியே
கணவனுக்குக் கையசைத்துச் சிரிக்கும்
கர்ப்பிணிப்பெண்ணைத் தவிர

மகாராஷ்டிரா மந்திரி நாராயண் ராணேவின் ஒரு மகன் நீலேஷ் இப்போது எம்.பி. மற்றொரு மகன் நிதீஷுக்கும் எம்.எல்.ஏ ஸீட் கேட்கிறார் ராணே. அவரது எதிர்ப்பு கோஷ்டி, நிதீஷுக்கு ஸீட் கொடுக்கக்கூடாது என்கிறது. ராணே ஆதரவு கோஷ்டி, ''முரளி தியோரா மத்திய அமைச்சர், அவர் மகனும் எம்.பி. அவர்களுக்கு ஒரு நியாயம். நிதீஷுக்கு ஒரு நியாயமா?'' என்கிறது. மத்திய அமைச்சர் சுஷில் குமார் ஷிண்டே, மகள் பிரணதிக்கு ஸீட் கேட்கிறார். அமராவதி தொகுதியைக் கைப்பற்றும் முயற்சியில் ஜனாதிபதி பிரதிபா பாட்டீலின் மகன் தீவிரமாக இருக்கிறார். இப்படி ஏகப்பட்ட வாரிசுகளின் அரசியல் முயற்சிகள் அரங்கேறிக் கொண்டிருக்கின்றன.

***(காங்கிரஸ்காரர்களே! டெல்லி ராஜ வாரிசைப் பாருங்க! பிரதமர் பதவியே தேடி வந்தாலும், மறுத்துட்டு கட்சியை வளர்க்கறேங்கறாரு!)***

கடந்த சட்டசபைத் தேர்தலில், காங்கிரஸ் 157 தொகுதிகளில் போட்டியிட்டு, 69 தொகுதிகளில் மட்டுமே ஜெயித்தது. அதன் கூட்டணிக் கட்சியான தேசியவாத காங்கிரஸ் 124 தொகுதிகளில் மட்டுமே போட்டியிட்டாலும், 71 இடங்களில் ஜெயித்தது. ஆனாலும், காங்கிரஸுக்கே விட்டுக் கொடுக்கும்படியானது. இந்தமுறை அதுபோன்ற ஒரு சூழ்நிலை தங்களுக்கு வந்துவிடக் கூடாது என்பதில் உறுதியாய் இருக்கின்றனர் தேசியவாத காங்கிரஸ் கட்சியினர்.

''தேர்தல்வரை அடக்கி வாசியுங்கள்; அப்புறம் அதுபற்றிப் பேசுவோம்'' என்று சொல்லி இருக்கிறார் பவார்.

***(மாயாவதி ஸ்டைலில் ஆறுமாத சுழற்சியில் பதவியை அனுபவிச்சிட்டு அப்புறம் கவுத்துடாதீங்க பவாரு!)***

சட்டசபைத் தேர்தலில் சிவசேனா - பா.ஜ.க. கூட்டணி ஆட்சிக்கு வந்தால், சிவசேனாவின் உத்தவ் தாக்கரேதான் முதலமைச்சர் என்று முடிவு செய்துள்ளது சிவசேனா. ஆனால், உத்தவ் முதலமைச்சராவதை எப்படியும் தடுத்துவிட சித்தமாக

* ராஜ்தாக்கரே



இருக்கிறார். மகாராஷ்டிரா நவ நிர்மாண் சேவா கட்சியின் தலைவரும், உத்தவின் சொந்தக்காரருமான ராஜ்தாக்கரே. கடந்த லோக் சபா தேர்தலில், பல தொகுதிகளில் தங்களுடைய மண்ணின் மனிதர்கள் பிரசாரத்தின் பலனாக, சிவசேனாவின்

# யார் முதல்வர்?

உவமை சொல்லலாம் போல!)

மகாராஷ்டிர அரசாங்கம் இனி ஜெயில்களில் சைவ உணவு மட்டுமே கொடுப்பது என்று முடிவு எடுத்துள்ளது. இதனால் புதிய சர்ச்சை கிளம்பி, விஷயம் கோர்ட்டில் இருக்கிறது. பல்வேறு மத,



✱ உத்தவ்தாக்கரே

## மகாராஷ்டிரா-பக்கம்

வோட்டுக்களைப் பிரித்து, காங்கிரஸ் கூட்டணி வெற்றி பெற வழிசெய்து கொடுத்தார் ராஜ் தாக்கரே. இதனால் சிவசேனாவுக்கு உள்ளூர உதறல் எடுத்திருக்கிறது!

**('இந்திய அரசியலும், குடும்பப் பகையும் போல'ன்னு ஒரு புது**

கலாசாரத்தைச் சேர்ந்த கைதிகள் இருக்கும்போது, அசைவம் கொடுத்தால், அது பன்றி மாமிசம், பசு மாமிசம் என வதந்தி பரவி பிரச்னைகளை ஏற்படுத்துவதாகச் சொல்கிறது அரசு தரப்பு.

**(எங்க ஊர்ல குத்தி, கொலை பண்ணிக்குவாங்களே தவிர, அசைவம், சைவம்னு பிரச்னை பண்ண மாட்டாங்க!)**

**- கௌதம் ராம்**






**சா**துர்யா, திருவல்லிக்கேணியில் இருந்த அந்த ஹோட்டலுக்குப் போய்ச் சேர்ந்தபோது முன்னிரவு பதினொரு மணி. மழை வரும்போல் இருந்தது. ரோட்டோர இட்லிக் கடைகள் அதைப் பொருட்படுத்தாமல் வியாபாரத்தில் மும்முரமாய் இருந்தன.

சாதுர்யா ஸ்கூட்டியை ஹோட்டலின் டூ வீலர்ஸ் பார்க்கிங்கில் வைத்துவிட்டு போர்டிகோவுக்கு வந்தாள். போர்டிகோவில் போலீஸ் ஜீப், சுழலும் விளக்கோடு தெரிந்தது. கான்ஸ்டபிள் ஒருவர் எதிர்கொண்டார்.

''515 மேடம்... ஃபிப்த் ஃப்ளோர்... இன்ஸ்பெக்டர் ரூம்ல இருக்கார்.''

அறை எண் 515 வெளிச்சத்தில் இருந்தது.

டை கட்டி வியர்த்துப் போயிருந்த மானேஜரை விசாரணை என்ற பெயரில் கேள்விக் கணைகளால் துளைத்துக்கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் இராஜேந்திரன், சாதுர்யாவைப் பார்த்ததும் பக்கத்தில் வந்தார்.

''வாங்க... மிஸ் சாதுர்யா...! இந்த அகாலவேளையில் உங்களுக்குத் தொந்தரவு கொடுக்கக்கூடாதுன்னு நினைச்சேன். பட் கமிஷனர்தான் சாதுர்யாவுக்கு இன்ஃபார்ம் பண்ணுங்கன்னு சொன்னார்.''

''நோ...ப்ராப்ளம் ஸார்...'' என்றவள் சுற்றும் முற்றும் பார்த்தாள்.

''பாடி எங்கே...?''

''ப்ளீஸ் கம் திஸ் சைட்...'' அறையின் இடதுபக்க மூலையை நோக்கிக் கூட்டிப் போனார் இன்ஸ்பெக்டர். சாதுர்யாவின் பார்வைக்கு திடும்மென்று அந்தக் காட்சி கிடைத்தது.

கட்டிலுக்கும் சுவருக்கும் நடுவில் இருந்த இடைவெளியில் ரத்த சேதம் இல்லாமல் அந்த இளைஞன் மல்லாந்து விழுந்து இறந்து போயிருந்தான். வயது முப்பது இருக்கலாம். அவன் உயிரோடு

ராஜேஷ்குமார்

இல்லை என்பதை மோப்பம் பிடித்துக்கொண்ட நான்கைந்து ஈக்கள் அந்த ராத்திரி நேரத்திலும் பறந்து அவன் முகத்தின் மீது உட்கார்வதும் பின் டீபாயின் மேல் உட்கார்ந்து ஓய்வு எடுப்பதுமாய் இருந்தன.

இன்ஸ்பெக்டர் இராஜேந்திரன் சொன்னார்.

''மிஸ் சாதுர்யா... இந்த இளைஞனின் பேரு சுந்தரமூர்த்தி. சொந்த ஊர் செங்கல்பட்டு. சென்னை தரமணியில் இருக்கிற ஒரு பிரைவேட் கம்பெனியில் சேல்ஸ் எக்ஸிக்யூட்டிவ்வா இருந்திருக்கார். இன்னிக்கு சாயந்தரம்தான் இந்த ஹோட்டலுக்கு வந்து ரூம் எடுத்திருக்கார். இராத்திரி பத்து மணி சுமாருக்கு ரூம் பாய் வாட்டர் ஜக்கோடு போய் காலிங்பெல் கொடுத்திருக்கான். சுந்தரமூர்த்தி கதவைத் திறக்காமல் போகவே, ரூம்பாய் ஹோட்டல் மானேஜருக்குத் தகவல் கொடுக்க, அவர் இண்டர்காம்ல கூப்பிட்டுப் பார்த்திருக்கார். சுந்தரமூர்த்திகிட்டயிருந்து எந்த ரெஸ்பான்ஸூம் இல்லாமல் போகவே, உள்ளே ஏதோ விபரீதம் நடந்திருக்கலாம்ன்னு நினைச்சு ஹோட்டல் மானேஜர் போலீஸூக்கு இன்ஃபார்ம் பண்ணிட்டார். நான் ஸ்பாட்டுக்கு வந்து பார்த்ததுமே இது ஒரு மர்டராய் இருக்குமோன்னு நினைச்சேன். பட் இது மர்டர் இல்லைன்னு இந்தக் கடிதம் சொல்லுது.''

இராஜேந்திரன் தன் கையில் வைத்திருந்த கடிதத்தை சாதுர்யாவிடம் நீட்டினார்.

'காவல்துறைக்கு,
கடந்த பல நாட்களாகவே

# விபரீத வினாடிகள்!

எனக்கு மனம் சரியில்லை. இந்த மனிதர்கள் மீதும் இந்த உலகத்தின் மீதும் இனம் புரியாத வெறுப்பு. வாழ விருப்பமில்லை. எனவே விஷத்தின் மூலம் என் முடிவைத் தேடிக் கொள்கிறேன். என்னுடைய தற்கொலைக்கு யாரும் காரணம் இல்லை.'

கடிதத்தில் இருந்து பார்வையை உயர்த்தினாள் சாதுர்யா. இராஜேந்திரனை ஏறிட்டாள்.

''அறையில் விஷ பாட்டில் இருந்ததா?''

''மேஜை டிராயரில் இருந்தது'' சொன்னவர், ''பூச்சிக் கொல்லி மருந்து... ஹைலி பாய்ஸண்ட்...''

இராஜேந்திரன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஒரு பெரியவர், ''டேய்... சுந்தரம்! என்னை விட்டுட்டுப் போயிட்டியேடா?'' என்று அழுகையில் உடைந்துபோன குரலோடு உள்ளே வந்தார். பின்னாலேயே வந்த கான்ஸ்டபிள் சொன்னார்.

''செத்துப் போனவரோட அப்பா ஸார்... நாம தகவல் கொடுத்ததும் உடனே டாக்ஸி பிடிச்சு வந்துட்டார்.''

சுந்தரமூர்த்தியின் உடலைப் பார்த்துக் கதறித் துடித்து அந்தப் பெரியவர் சற்று ஆசுவாசமானதும் சாதுர்யா அவரை நெருங்கினாள்.

''அய்யா... உங்க பேர் என்ன...?''

அவர் கண்ணீரோடு ஏறிட்டு, ''சிவசைலம்'' என்றார். தொடர்ந்து, ''அம்மா! நான் ரிடையர்ட் ஸ்கூல் டீச்சர். என்னோட ஒரே மகன்தான் சுந்தரமூர்த்தி. அடுத்த மாசம் பதினேழாம் தேதி அவனுக்குக் கல்யாணம்.''

''என்னது... சுந்தரமூர்த்திக்கு அடுத்த மாசம் கல்யாணமா...? பொண்ணு யாரு?''

''அந்தப் பொண்ணு பேர் பூமா... சுந்தரமூர்த்தி வேலை செய்யற அதே கம்பெனியில்தான் வேலை பார்க்கிறா... காதல் கல்யாணம்.''

''நீங்க இப்படி சொல்றீங்க... ஆனா உங்க சன் தனக்கு இந்த உலகத்துல வாழவே பிடிக்கலைன்னு லெட்டர் எழுதி வெச்சுட்டு தற்கொலை பண்ணிக்கிட்டிருக்கார். அப்ப இந்த லெட்டருக்கு என்ன பதில் சொல்றீங்க?''

சாதுர்யா நீட்டிய லெட்டரை வாங்கிப் பார்த்தவர், சரேலென்று முகம் மாறினார்.

''இது என் மகன் எழுதின லெட்டராய் இருக்க முடியாது... இது அவனோட கையெழுத்து இல்லை...! அவன் கையெழுத்து கோழி கிறுக்கினமாதிரி படிக்க முடியாதபடி இருக்கும். அதுவுமில்லாமே எப்பவும் ஆஃபீஸ் முடிஞ்சதும் செங்கல்பட்டுக்கு வந்துடுவான். நேற்றைக்கு மட்டும் ஃபோன் பண்ணி, 'நிறைய வேலை இருக்கு. நான் என் ஃப்ரெண்ட் வீட்ல படுத்துத் தூங்கிட்டு மறுநாள் ஆஃபீஸ் போயிடறேன்'னு சொன்னான்.''



''அப்படிச் சொல்லிட்டு இந்த லாட்ஜுக்கு வந்து ரூம் போட்டுத் தங்கியிருக்கார். என்ன காரணம்...!''

''தெரியலையேம்மா!''

கமிஷனர் வைகுண்டராமன் சாதுர்யாவை ஏறிட்டார்.

''போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட் என்ன சொல்லுது!''

''சுந்தரமூர்த்தி விஷம் குடித்துச் சாகலை.''

''மர்டரா?''

''பி.எம். ரிப்போர்ட் அதையும் கன்ஃபார்ம் பண்ணலை ஸார். இது ஒரு இயற்கையான மரணம். மெடிக்கல் டெர்ம்ஸ்படி CVAன்னு சொல்றாங்க...''

''சி.வி.ஏ...?''

''எஸ்... கார்டியோ வாஸ்குலார் ஆக்ஸிடெண்ட் (Cardio Vascular Accident) ஒரு மனிதனுக்குக் கடுமையான அதிர்ச்சி ஏற்படும்போது ஒரே சமயத்தில் அவனுடைய மூன்று முக்கிய உறுப்புகளான இதயம், நுரையீரல், மூளை-பத்து விநாடி நேரத்துக்குள் செயலிழந்து போகுமாம். இந்த வகையான மரணத்தை டாக்டர்கள் சி.வி.ஏ.ன்னு சொல்றாங்க.''

**ஜோக்ஸ்...**

**பெட்டிக்கடையில் வாங்கி**
**காக்கா கடி கடித்த**
**கமர்கட்டின் ருசி**
**எந்த டிபார்ட்மெண்ட் ஸ்டோர்**
**பீட்ஸாவிலும் வரவில்லை**

**- சி.பி.செந்தில்குமார்**

''ஸோ...இது மர்டரும் இடையாது. தற்கொலையும் இல்லை. இயற்கையான மரணம்... அப்ப அந்த போலி தற்கொலை லெட்டர்...?''

''அதான் ஸார்... ஒரே குழப்பமாய் இருக்கு... இந்த கேஸ்ல நான் ஒரு விஷயத்தை அப்ஸர்வ் பண்ணி டாக்டர்கள் கிட்டே தனிப்பட்ட முறையில் சொல்லி ரெண்டாவது போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட்டைக் கேட்டிருக்கேன் ஸார்.''

''நீ என்ன அப்ஸர்வ் பண்ணினே...?''

சாதுர்யா சொன்னாள்.

அவள் சொன்னதைக் கேட்டுவிட்டு, இரண்டு புருவங்களையும் உயர்த்தினார் கமிஷனர்.

அமைந்தகரையில் இருந்த பூமாவின் வீட்டுக்கு முன்பாய் தன் ஸ்கூட்டியை சாதுர்யா நிறுத்தியபோது, சாயந்த்ரம் ஆறரை மணி. பூமாவும் அவளுடைய அம்மாவும் வரவேற்பை சோபாவிலேயே வருத்தமாய்க் கிடைத்தார்கள்.

சாதுர்யா இரண்டு பேரையும் பார்த்துக் கொண்டு பேசினாள். ''தொந்தரவுக்கு மன்னிக்கணும். சுந்தரமூர்த்தியோட மரணம் சம்பந்தமாய் உங்ககிட்ட கொஞ்சம் பேசணும்.''

''யெஸ்...'' என்றாள் பூமா.

''நீங்க ரெண்டு பேரும் ஒருத்தரை ஒருத்தர் விரும்பினீங்க இல்லையா?''

''ஆமா...''

''சுந்தரமூர்த்தியோட மரணம் எப்படி நடந்து இருக்கும்னு நினைக்கறீங்க...?''

''எனக்குக் குழப்பமாய் இருக்கு!''

சாதுர்யா புன்னகைத்தாள்.

''உங்களுக்குக் குழப்பம் வர அவசியமே இல்லையே பூமா. ஏன்னா ராத்திரி ஒன்பதரை மணி சுமாருக்கு சுந்தரமூர்த்தி தன்னோட செல்ஃபோனில் உங்ககிட்ட பேசியிருக்கார். அப்ப அவர் என்ன பேசினார்?''

''ஒண்ணும் பேசலை... வழக்கமா எப்பவும் ஒன்பதரை மணிக்கு ஃபோன் பண்ணி கல்யாண ஏற்பாடுகளைப் பற்றிப் பேசுவார். நேற்றைக்கும் அதைத்தான் பேசினார்.''

''எங்கிருந்து பேசறதாய்ச் சொன்னார்?''

''செங்கல்பட்டிலிருந்து...''

சாதுர்யா பூமாவைப் பார்த்துப்




**சா**துர்யா ரத்ன சபாபதி பேசறேன்... லாக்கர் விஷயமா நான் பேங்க்ல இருக்கிற ஸ்டாஃப் எல்லோரையும் விசாரிக்கணும்னு சொன்னேன். கஸ்டமர்ஸ் டிஸ்டர்ப் ஆகாம விசாரிக்கும்படி மேனேஜர் கேட்டுக்கிட்டார். நானும் சில ஸ்டாஃப்கிட்டே நேரடியா விசாரிக்காம தள்ளியிருந்து அப்சர்வ் பண்ணினேன். அதுலதான் அஸிஸ்டென்ட் மேனேஜர் வாத்வா மாட்டிக்கிட்டார். அவர் ஒரு கஸ்டமருக்குப் பணம் எண்ணிக் கொடுக்கும்போது, அவரை தூர இருந்து கவனிச்சேன். சத்தம் வாரமதான் எண்ணினார் என்றாலும், அவர் உதட்டசைவு வைச்சு அவர் தமிழ்லதான் எண்ணிட்டிருக்கார்னு கண்டுபிடிச்சுட்டேன். அப்புறம் அவரைத் தனியா கொண்டுபோய் விசாரிச்சபோது உண்மையை ஒத்துக்கிட்டார். சரியான விடையை யூகித்து எழுதி, குலுக்கலில் தேர்வான வாசகர்கள் விவரம் வட்டமேஜை பக்கத்தில்...

புன்னகைத்தாள்.

''பூமா..! நீ சொல்ற பொய்யை மத்தவங்க நம்பலாம். ஆனால், போலீஸ் நம்பாது. உனக்கு ஒரு மணி நேரம் டைம் தர்றேன். அதுக்குள்ளே நீ உண்மையை ஒத்துக்கணும். ஒத்துக்கிட்டா போலீஸ் நடவடிக்கை கடுமையாய் இருக்காது. நானாகக் கண்டுபிடிச்சா நடவடிக்கை கடுமையாய் இருக்கும்.''

**பூ**மா தலைகுனிந்து நிற்க, அவள் அம்மா சொல்ல ஆரம்பித்தாள்.

''சுபத்ரான்னு ஒரு துணை நடிகை. கோடம்பாக்கத்துல இருக்கா. சுந்தரமூர்த்திக்கு அந்தப் பெண்ணோடு எப்படியோ பழக்கம் ஏற்பட்டு அந்தப் பழக்கத்திலிருந்து அவர் விடுபட விரும்பியிருக்கார். ஆனா, அந்த சுபத்ரா விடலை. தன்னைக் கல்யாணம் பண்ணிக்கச் சொல்லி வற்புறுத்தியிருக்கா. இவர் மாட்டேன்னு பிடிவாதமாய் மறுத்துட்டார். இந்த நிலைமையில்தான் என் பொண்ணு பூமாவும், சுந்தரமூர்த்தியும் ஒருத்தரையொருத்தர் விரும்பி கல்யாணம் பண்ணிக்க முடிவு எடுத்தாங்க. ஆனா, அந்த சுபத்ரா தன்னைத் தவிர வேற யாரையும் கல்யாணம் பண்ணிக்கக் கூடாதுன்னு முரண்டு பிடிச்சா. அவளை என்ன பண்றதுன்னு தெரியாமல் எங்ககிட்ட வந்து யோசனை கேட்டார். நாம போலீஸுக்குப் போலாம்னு சொன்னேன். அவர் கேட்கலை...'' அம்மாக்காரி பேச்சை நிறுத்த, பூமா அழுகையோடு பேச்சைத் தொடர்ந்தாள்.

''பத்து நாளைக்கு முன்னாடி ஒருநாள்

சுந்தரமூர்த்தி என்கிட்டே ஒரு லெட்டரைக் கொண்டு வந்து கொடுத்தார். படிச்சுப் பார்த்தேன். தன்னைக் கல்யாணம் பண்ணிக்கச் சொல்லி சுபத்ரா எழுதின லெட்டர் அது. லெட்டரைக் கோபமாய் எழுதியிருந்தா. இந்த விவகாரத்தை எப்படி முடிக்கப் போறீங்கன்னு கவலையோடு கேட்டேன். அவர் ரொம்ப நேரத் தயக்கத்துக்குப் பிறகு என்கிட்டே ஒரு திட்டத்தைச் சொன்னார்.''

''திட்டமா...என்ன திட்டம்?''

''ஒருத்தரோட கையெழுத்தைப் போலவே அட்சரம் பிசகாமே எழுதற திறமை என்கிட்ட இருக்கு. என்கிட்டே ஒரு திட்டத்தைச் சொன்னார். சுபத்ராவோட கையெழுத்தில் அவ எழுதின மாதிரி ஒரு தற்கொலைக் கடிதம் எழுதி அவருக்குக் குடுத்துட வேண்டியது. அவர் கோடம்பாக்கத்தில் தங்கியிருக்கிற சுபத்ரா வீட்டுக்குப் போய் குடிப்பழக்கம் உள்ள அவளுக்கு ஸ்காட்ச் விஸ்கியில் விஷத்தைக் கலந்து குடுத்துட வேண்டியது. லெட்டரை போலீஸ் கைக்குக் கிடைக்கிற மாதிரி டீபாய் மேல் வெச்சுட்டு செங்கல்பட்டுக்குப் போய் விட வேண்டியது. இந்தத் திட்டத்துக்கு நான் ஒத்துக்கலை. அந்த சுபத்ராவுக்கு பணத்தைக் கொடுத்து பிரச்னையை செட்டில் பண்ணிடலாம்ன்னு சொன்னேன். அவர் கேட்கலை. கடைசியில் அரை மனசோடு திட்டத்துக்கு ஒத்துக்கிட்டேன். சுபத்ராவை தீர்த்துக் கட்டறதுக்கு இராத்திரி பதினொரு மணிக்குமேல்தான் சரியான நேரம்ன்னு முடிவு பண்ணின சுந்தரமூர்த்தி, செங்கல்பட்டுக்குப் போகாமே லாட்ஜில் ரூம் எடுத்துத் தங்கினார். எனக்குப் பயமாய் இருந்தது. இராத்திரி ஒன்பதரை மணி இருக்கும். எனக்கு ஃபோன் பண்ணினார். சுபத்ரா எழுதின மாதிரியான தற்கொலைக் கடிதத்தில் நான் கையெழுத்து போடலைன்னு சொன்னார். திட்டத்தை ரெண்டு நாள் கழிச்சு வெச்சுக்கலாமான்னு கேட்டார். நான் உங்க இஷ்டம்ன்னு சொல்லி ஃபோனை கட் பண்ணிட்டேன். அதுக்கப்புறம் அவர் இறந்து போன செய்திதான் காலையில் கிடைச்சது''

சொல்லி முடித்த பூமா கண்ணீரோடு நிமிர்ந்தாள்.

''மேடம்! சுந்தரமூர்த்தி எப்படி இறந்து போனார்ன்னு சொல்ல முடியுமா?''

சாதுர்யா மெல்லச் சிரித்தாள்.

''சுந்தரமூர்த்தி இறந்துகிடந்த அறைக்குள் போன சில நிமிஷத்துக்குள்ளாகவே இது தற்கொலை அல்ல; கொலையும் அல்ல. ஏதோ ஒரு விபரீதம் நேர்ந்து சுந்தரமூர்த்தியின் உயிர் பிரிந்து இருக்கிறது என்பதைப் புரிந்துகொண்டேன். அதற்குரிய தடயமும் என் பார்வையில் பட்டது. அது என்னன்னு சொல்லட்டுமா?''

சாதுர்யா சொல்ல ஆரம்பித்தாள்... ○



**துப்பறியும் போட்டி-11**

***வாசகர்களே!***

*சாதுர்யா என்ன சொன்னாள்? ஹோட்டல் அறையில் சுந்தரமூர்த்தி இறந்துபோனது எப்படி?*

*க்ளூ: கதையின் முதல் 50 வரிகளுக்குள் அந்த க்ளூ இருக்கிறது.*

சரியான பதிலை போஸ்ட் கார்டில் எழுதி துப்பறியும் போட்டி - 11 என்று குறிப்பிட்டு கல்கி முகவரிக்கு அனுப்புங்கள். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**கடைசித் தேதி: 16.09.09**



பொருளாதாரத்தில் பட்டம்



அண்ணா அமைச்சரவை



கனிந்த முறுவல்

இதயக்கனி



பேரறிஞரும்...
பெருந்தலைவரும்...



பத்திரிகை
சந்தி



முன்னாள்...
இந்நாள்...



ஜப்பானியர் உ

நம்பினாலும், நம்பாவிட்டாலும் காலம் இயங்கிக்கொண்டே இருக்கிறது; விளைவுகளை ஏற்படுத்திக்கொண்டே இருக்கிறது. அப்படியொரு அற்புதத்தை நிகழச் செய்த காலந்தானே 'பிரகோஷ காலம்.'

ஆலகால விஷத்தை பகவான் சங்கரர் அமுது செய்த அதே காலத்தில்தான், அபூர்வ சங்கரரான பெரியவாளின் திருப் பாதம் அந்த இடத்தில் பதிந்தது.

கிடுகிடுவென அந்தப் பள்ளத்தாக்கில் இறங்கி கொஞ்சதூரம் போய் நாலா பக்கமும் சுற்றிப் பார்த்தார். மந்திரிகள் இருவரையும் அருகில் அழைத்து, வடக்கு மூலையில் மலைமுகட்டைச் சுட்டிக் காட்டி ''ஏதாவது தெரிகிறதா?'' என்று கேட்டார்.

எல்லோரும் அந்த இடத்தைக் கூர்ந்து பார்த்தனர். ஒரு வயதான கிராமவாசி, ''என் கண்ணுக்கு சிவலிங்கம் தெரியுது சாமி'' என்று மெய்மறந்து கூச்சலிட்டு விழுந்து வணங்கினார்.

குழுமியிருந்த யாருக்கும் பேச்சே

# சங்கராபுரம்

எழவில்லை. தங்களை அறியாது அத்தனை பேரும் நமஸ்கரித்தனர்.

ஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தார். ''இதுதான் 'சுயம்பு'ங்கறது. பகவான் எல்லா இடத்திலேயும் வியாபிச்சிருக்கான். நாமதான் அவனைப் பார்க்க மறந்துட றோம். இல்லேன்னா, தீர்மானமா கண்ணை மூடிண்டு, பாக்க மறுத்துட றோம்.''

கெண்டியிலிருந்த நீரை மூன்று முறை கையில் வாங்கி கணநேரம் கண்ணை மூடி தியானித்து, நான்கு திக்கும் நகர்ந்து போய் தெளித்தார். அருகில் நின்ற மடத்துச் சிப்பந்தியின் கையிலிருந்த மரத் தட்டி லிருந்து சோபன அக்ஷதையையும் மலர் களையும் கைநிறைய எடுத்து நாலா பக்கமும் வீசினார்.

அங்கே அமைத்திருந்த மேடை மீது ஏறி நின்று, குழுமியிருந்த ஜனங்கள் அனைவரையும் கூர்ந்து பார்த்தார்.

''நாங்கள்ளாம் இங்கே எதுக்கு வந்தி ருக்கோம்னு உங்களுக்குத் தெரியாதில் லையா? இந்த இடத்திலே ஒரு சிறிய நகரம் உருவாகப் போறது. பகவான் நம்ம



எல்லோருக்கும் இவ்வளவுதான் பொழுதுன்னு பொறந்த அன்னைக்கே எழுதி வைச்சுட்டான். அந்தப் பொழுது வீணா போக்கறதுக்காக இல்லே.

# டால்மியாபுரம் கணேசன்

இப்ப எல்லாம் 'காலம் பொன் போன்றது'ன்னு சொல்றா. அது சரியா? கெடையாது. ஒங்க கையிலே போட்டுண்டிருக்கற ஒரு தங்க மோதிரம் தொலைஞ்சு போச்சுன்னு வச்சுக்கோங்க. ஒங்க கையிலே காசிருந்தா வேறே ஒரு மோதிரம் வாங்கிடலாம். ஆனா, போன நேரம் போனதுதான். அதனாலே 'காலம் உயிர் போன்றது'ங்கறதுதான் சரியாயிருக்கும். போன உயிரைத் திரும்பக் கொண்டுவர முடியுமா?

அதனாலே பகவான் நமக்குன்னு விதிச்சிருக்கிற காலத்தை நமக்கு, நம்ம குடும்பத்துக்கு, இந்தச் சமூகத்துக்குப் பிரயோஜனமா செலவிடணும். அதுக்கான வழிவகைகளை எல்லாம் இங்கே உருவாகப் போற நகரம் உங்களுக்கெல்லாம் சொல்லிக் கொடுக்கும். சுற்றுவட்டார கிராமங்கள்ல உள்ள எல்லா ஜனங்களும் இங்கே கெடைக்கப்போற வசதிகளைப்



# "ஒரு பயமும் வேண்டாம் அம்பாள் இருக்கா!"

பூரணமா பயன்படுத்திக்கணும்; அனுபவிக்கணும். மேலும், இந்த நகரம் உருவாகறதுக்கு நீங்க எல்லாரும் உதவியும், ஒத்துழைப்பும் கொடுக்கணும். ஏன்னா, இது உங்களுக்காகத்தான். எல்லோரும் க்ஷேமமாயிருக்கணும். நாராயண - நாராயண''

ஸ்வாமிகள் கீழே இறங்கினார். விடுவிடுவென நடக்கத் தொடங்கிவிட்டார்.

மந்திரிகளைப் பார்த்து, ''நீங்க நின்னுக்கோங்கோ! உங்களாலே அவ்வளவு தூரம் நடக்க முடியாது. நாளைக்குச் சாயங்காலமா மடத்துக்கு வாங்கோ! மேற்கொண்டு ஆகவேண்டியதைப் பார்க்கலாம்.''

''ஹர ஹர சங்கர ஜெய ஜெய சங்கர'' என்று கோஷித்தபடி கூட்டம் வழி விட்டது.

**ம**றுநாள் மாலை 5 மணி.

பெரியவாளிடமிருந்து அழைப்பு வந்தது. உள்ளே, பெரியவாளைப் பார்க்க பிரபல வக்கீல் ஒருவரும், டாக்டரும் வந்திருந்தனர்.

''நான் கூப்பிடவில்லை. தெய்வ சங்கல்பம் இவா ரெண்டு பேரும் சேர்ந்து வந்திருக்கா. உங்க யோசனையை இவாகிட்டேயும் சொல்லுங்கோ.

கூடிப் பேசி மேலே ஆக வேண்டியதைப் பாருங்கோ'' என்றார். காரியதரிசியை அழைத்தார். ''இதோ பாரு, வந்திருக்கற நாலு பேரும் பொறுப்பும் கடமையும் உள்ளவா. அவாளை அதிகம் தாமதப்படுத்தக் கூடாது. அவாளுக்கு என்ன வேணுமோ உதவி பண்ணு'' என்றார்.

''போய்க் கலந்து பேசுங்கோ. நாளைக்கு சட்டச் சிக்கல் ஏதும் வரப்படாது. யாருக்கும் இதனாலே எந்தக் கஷ்டமும் வரப்படாது. தர்மத்துக்கு ஹானியா எந்த முடிவும் எடுக்கக்கூடாது. இதையெல்லாம் மனஸிலே வச்சண்டு, முடிவெடுங்கோ! கிருஷ்ணமூர்த்தி - நீயும் அவாகூட இருடா! நாளைக்கு நீதான் எல்லாத்தையும் பாத்துக்கணும்.'' பெரியவா எழுந்து கொண்டார்.

ஆலோசனை நீண்டது! எல்லா சாதக பாதகங்களும் ஆராயப்பட்டன.

மறுநாள் காலை 9 மணிக்கு மீட்டிங் தொடங்கியது. முதலில் 'ஸ்ரீசங்கரா ட்ரஸ்ட்' என்ற பெயரில் ஒரு ட்ரஸ்ட் உருவானது. அதற்கு கார்ப்பஸ் ஃபண்டாக நான் கொண்டு வந்த இருபது லட்சத்தில்- மடத்தின் பங்கு போக, பாக்கி பதினைந்து லட்சத்தைக் கொடுத்தேன். மந்திரிகள் இருவரும் தலா ஒரு கோடிக்கு செக் எழுதிக் கொடுத்தனர்.

அதைத் தொடர்ந்து மின்னல் வேகத்

**ஜீ**வன் மாதிரியில்லாமல் ஈச்வரன் மனசுக்கு மேற்பட்ட சக்தி. அதனாலே அவனுடைய க்ருபையில் தான் மனஸ் அடங்க முடியும். அது தன்னைத்தானே அடக்கிக்கொள்ளவில்லை. ஈச்வரன்தான் மாயைக் கலப்பற்ற தன்னுடைய ஆத்ம ஸ்வரூபத்திலே ஜீவமனசை வசப்படுத்தி வைக்கிறான். ப்ரயாசை, ப்ரயத்தனம்தான் ஜீவன் செய்யக் கூடியது. அதற்கு மேலே மாயா நாடகத்தைப் பண்ணினவன்தான் ஸித்தியை அருளவேண்டியவன். ஆனபடியால், ஓயாமல் வேலை பண்ணிக்கொண்டேயுள்ள மனஸ் எப்படி வேலையே பண்ணாததும், தனக்கு அப்பாற்பட்டதாயுமிருக்கிற ஆத்மாவிலே கரைந்துபோக முடியும் என்று தர்க்க ரீதியில் கேட்பதில் அர்த்தமில்லை. அதைத்தானே மாயை இதுவாக்கியிருக்கிறது? இதே மாதிரி, திரும்ப இது அதுவாக ஆகவும் இடம் கொடுத்து, தான் விலகிப்போய் விடுகிறது.

மனசால் ஆத்மாவைப் பிடிக்க முடியாது. ஆனால், நமக்குத் தெரிந்தது, நம்மை சதா சர்வ காலமும்

தில் காரியங்கள் கைகூடின. ரிஜிஸ்ட்ரேஷன், அரசாங்க அனுமதி எல்லாம் பத்து நாளில் நடந்து முடிந்தன. என்னை மேனேஜிங் டிரஸ்டியாக நியமித்தார்கள்.

ஸ்வாமிகளிடம் சொல்ல, மிகுந்த சந்தோஷப்பட்டார். ''ஜெட் வேகத்தில் காரியம் நடக்கறது போலிருக்கு. நல்லதுதான். 'சுபஸ்ய சீக்ரம்'னு சொல்லுவா. அடுத்தாப்லே என்ன பண்ணப் போறேள்?' ஸ்வாமிகளின் கேள்விக்கு காரியதரிசி பதில் பேச ஆரம்பித்தார்.

''ஆர்கிடெக்ட் ஒருத்தர் மெட்ராஸ் - வட பழனியிலிருக்கார். அவர்கிட்டே நம்ம திட்டத்தைப் பத்திப் பேசினேன். அமெரிக்காலேருந்து ஒரு சீனியர் ஆர்க்கிடெக்ட் எதேச்சையா மெட்ராஸ் வந்திருக்காராம். அவரையும் அழைச்சுண்டு நாளைக்கு இங்கே வரேன்னார்.''

''வரச்சொல்லு பார்க்கலாம்.''

''அவா வரதுக்கு முன்னாலே அந்த இடத்துலே நாம என்ன பண்ணப் போறோம்னு தீர்மானம் பண்ணிக்கணும். ஆரம்பத்திலேயே ரொம்ப இழுத்து விட்டுண்டுட்டா, பணம் பத்தாம போயிடுமோன்னு பயமாயிருக்கு!'' தயங்கிய காரியதரிசியிடம், உறுதி துலங்கச் சொன்னார் ஸ்வாமிகள்.

''ஒரு பயமும் வேண்டாம். அம்பாள் இருக்கா. திட்ட வரைவு, எல்லாத்தையும் உள்ளடக்கி, பூரணமா இருக்கட்டும். ஆரம்பிப்போம். முடிஞ்சதைப் பண்ணுவோம். துண்டு விழாது. அப்படி விழுந்துடுத்துன்னா முடியறபோது கொஞ்சம் கொஞ்சமா செஞ்சுண்டே போறது. நல்ல காரியங்கள் பண்ண ஆரம்பிச்சுட்டா, அதுக்கு முடிவே கிடையாது. அது பாட்டுக்கு ஈஸ்வர சங்கல்பத்திலே போயிண்டே இருக்கும்.''

பளிச் பளிச்சென்று, ஆசீர்வாதமாக வெளிப்பட்டன பெரியவாளின் வார்த்தைகள்!

(தொடரும்)

**இறுக்கிப் பிடித்துக்கொண்டிருப்பது, இந்த மனஸ்தான். அதனால் இதை வைத்துக் கொண்டுதான் நாம் ப்ரயாசை, ப்ரயத்தனம், சாதனை செய்தாக வேண்டும். மனசினால் முடியக்கூடியது, உபத்ரவம் பிடித்த தன்னை எப்படியாவது தொலைத்துத் தலைமுழுகி விட்டு உபத்ரவமே இல்லாத ஆத்மாவாக ஆகிவிட வேண்டுமென்று நினைப்பதுதான். தன்னால் முடிந்த இந்த நினைப்பை அது விடாமல் வைராக்கியத்தோடு அப்யசித்துக் கொண்டேயிருக்க வேண்டும். அப்புறம் க்ருபை என்று ஒன்று இருக்கிற தோல்லியோ? அது பாக்கி வேலையைப் பார்த்துக்கொண்டு விடும்.**

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்**



தில்லி ஃபீரோஷா ரோடில் ரவீந்திர பவன் இருக்கிறது. அதுதான் இந்தியக் கலைகளையும், கலைஞர்களையும் இணைப்பதற்காக அரசாங்கத்தால் உருவாக்கப்பட்ட கலைக் கேந்திரம். சாகித்ய அகெதமி, சங்கீத அகெதமி, லலித் கலா அகெதமி ஆகிய மூன்றும் அக்கட்டடத்தில்தான் இருக்கின்றன. ஆனால், இதுவரை, மூன்றும் ஒன்றிணைந்து எந்தக் கலை நிகழ்வையும் அவை தொடங்கிய காலத்திலிருந்து நடத்தியதில்லை. காரணம், அவை அரசாங்க அலுவலகங்கள்!

விருது வழங்கும் ஸ்தாபனமாகவும், அவ்வப்பொழுது, கருத்தரங்கு என்ற பேரில், சடங்கு ரீதியான நிகழ்வுகள் நடத்தும் ஓர் அமைப்பாகவும் சாகித்ய அகெதமி மாறியிருக்கிறதே தவிர, இந்திய மொழி இலக்கியங்களுக்குள்ளோ அல்லது வெவ்வேறு மொழிப் படைப்பாளிகளுக்கிடையேயோ எந்த விதமான ஒட்டுறவையும் புரிதலையும் ஏற்படுத்தியிருப்பதாகத் தெரியவில்லை. அரசாங்க ஆதரவு பெற்ற சாகித்ய அகெதமியோ அல்லது, தேசிய புத்தக நிறுவனமோ இருந்திராத பழம்பெரும் காலத்தில், இராமாயண, மகாபாரதக் கதைகள், இந்தியாவின் ஒவ்வொரு மூலையிலும் பரவி, நம் இந்தியக் கலைப் பிரக்ஞையின் இன்றியமையாத அம்சங்களாய் எப்படி மாறின? அரசாங்க உதவியில்லாமல், மக்களிடையே நிகழ்ந்த கருத்துப் பரிமாற்றங்கள்தாம் இதற்குக் காரணமாக இருக்க வேண்டும். இந்தக் கோட்பாட்டுப் பின்புலத்தில்தான், சிவசங்கரி செய்திருக்கும் சாதனையைப் புரிந்து கொள்ள வேண்டும். பதினாறு ஆண்டுகள் தவம் புரிந்திருக்கிறார் சிவசங்கரி. பதினெட்டு மொழி படைப்பாளிகளைச் சந்தித்துப் பேசியிருக்கிறார். சந்தித்துப் பேசுவதற்கு முன் ஒவ்வொரு மொழியிலும் உள்ள சிறந்த இலக்கியங்களை வரலாற்று ரீதியாகப் படித்துத் தெளிந்த அறிவுடன் ஆழங்காற்பட உரையாடியிருக்கிறார்.

இப்பொழுது வந்திருக்கும் நான்காம் தொகுதியில் உள்ளவை, வட இந்திய மொழிகளாகிய, ஹிந்தி, உருது, காஷ்மீரி, பஞ்சாபி ஆகியவற்றின் சிறந்த படைப்பாளிகளின் நேர்காணல்கள், அவர்களுடைய படைப்புக்கள், அம்மொழிப் படைப்புக்கள் குறித்து வரலாற்று ரீதியான கட்டுரைகள். சமஸ்கிருதமும் இத்தொகுதியில் இடம் பெற்றிருக்கிறது.

இத்தொகுதியில் ஐந்து மொழிகள் பற்றி 27 ஆசிரியர்களுடைய சிந்தனைகள், நேர்காணல்கள், படைப்புக்கள் இடம் பெற்றிருக்கின்றன. இவர்களில் ஆறு பெண்கள், இரண்டு தலித் எழுத்தாளர்கள். இவர்களைச் சந்திப்பதற்காக சிவசங்கரி மேற்கொண்ட தம் பயண அனுபவங்களையும் சுவாரஸ்யமாகக் கூறுகிறார்.




"இந்தியக் கலாசாரம் என்பது பல வண்ண நூல்களால் இழைக்கப்



இந்திரா பார்த்தசாரதி

# கலாசாரப் பட்டாடை!

பட்ட ஒரு பட்டாடை'' என்பார் டாக்டர் சுனிதி குமார் சாட்டர்ஜி. ஒவ்வொரு நூல் இழைக்கும் தனி அடையாளம் உண்டு. ஆனால் அதைப் பட்டாடையினின்றும் பிரித்துத் தனித்துக் காண முடியாது. இந்திய மொழி ஒவ்வொன்றுக்கும் அதற்கென்று ஒரு தனி மேதைமை (genius) இருக்கின்றது. அதுதான் அதன் கலாசார முகம். ஆனால் ஒட்டுமொத்தமாகப் பார்க்கும்போது, இந்த முகங்கள் அனைத்தும் சேர்ந்துதான், இந்தியப் பண்பாட்டு அடையாளத்தை ஓர் அழகிய பட்டாடையாக நிறுவுகின்றன என்பது புலப்படும். இதைப் புரிந்து கொள்வதற்கு இந்திய மொழியிலுள்ள சிறந்த படைப்புக்களை நாம் ஊன்றிப் படிக்க வேண்டும். இதற்கு வகை செய்வதற்காகத்தான், சிவசங்கரி, இந்தியாவின் நான்கு திசைகளிலுள்ள மொழிகளின் படைப்புக்களையும், படைப்பாளிகளையும் நமக்கு அறிமுகம் செய்து வைக்கிறார்.

பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த பெண்பாற் கவிஞராகிய லால்டெட்டைப் படிக்கும்போது நமக்குச் சிவவாக்கியர் நினைவு வருகிறது.

லால்டெட் கூறுகிறார்:

***'உன் சிலை ஒரு கல், கோயிலும் கல்தான்/ உச்சி முதல் பாதம் வரை எல்லாமே கல்தான்/ எதை வழிபடுகிறாய் முட்டாள் பிராமணனே/ இதயத்தின் உயிர்நிலைக் காற்றை மனத்தோடு இணைத்து விடு!'***

இதைச் சிவவாக்கியர் சொல்வதோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, கிட்டத்தட்ட, இந்த மத்திம நூற்றாண்டுகளில்தாம், ஒரு சமுதாயப் புரட்சி இந்தியாவில் தோன்றியிருக்க வேண்டுமென்றுபடுகிறது.

***'நட்ட கல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில் சுட்ட சட்டி சட்டுவம் அறியுமோ?'***

சிவசங்கரி தந்திருக்கும் இந்த நான்கு தொகுதிகளும், இந்திய மொழிப் படைப்புக்களை ஒப்பிட்டு ஆராய்வதற்கு உதவுகின்ற கையேடு. 'பொதிய மலைப் பிறந்த மொழி வாழ்வறியும் காலமெல்லாம்', சிவசங்கரியின் சாதனை பேசப்படும்! **இலக்கியம் மூலம் இந்திய இணைப்பு, நான்காம் தொகுப்பு - வடக்கிந்திய மொழிகள், ஆசிரியர்: சிவசங்கரி, கங்கை புத்தக நிலையம், 23, தீனதயாளு தெரு, தியாகராயநகர், சென்னை-17, விலை ரூ.500/-**



**க**ப்பல் கவிழ்ந்து கடலில் மூழ்கி அலைகளால் அடித்துச் செல்லப்பட்டு, ஆள் அரவமற்ற தீவில் ஒதுங்கினர், டூர் கிளம்பிய கணவனும் மனைவியும்.

''தனியாக மாட்டிக்கொண்டோமே! யார் வந்து காப்பாற்றுவார்கள்?'' என்றாள் மனைவி.

கணவன் கேட்டான்: ''இந்த மாதம் பத்தாம் தேதி கிரெடிட் கார்டுக்குப் பணம் கட்டச் சொன்னேனே! செய்தாயா?''

''இல்லையே!''

''சரி! பெர்சனல் லோனுக்கு, செக் டெபாசிட் செய்யச் சொன்னேனே! அதாவது செய்தாயா?''

''இல்லை! சுத்தமா மறந்துட்டேன்! அதுக்குள்ளதான் டூர் கிளம்பிட்டோமே!''

''சரி! கவலையை விடு! எப்படியும் கடன் வசூல் பண்ண 'பேங்க்கில்' இருந்து நம்மளைத் தேடி ஆளுங்க வருவாங்க! பயப்படாதே!''

**பி**ச்சைக்காரனுக்கு ஓர் ஆசாமி தினமும் பத்து ரூபாய் பிச்சை போட்டு வந்தான். கொஞ்ச நாள் கழித்து ஐந்து ரூபாயும் இன்னும் சில மாதத்தில் அது இரண்டு ரூபாயுமாய் ஆனது.

அந்தப் பிச்சைக்காரன், ''பத்து, ஐந்து... என்று, இப்போது நீங்கள் போடுவது இரண்டு ரூபாய் ஆகிவிட்டதே! ஏன்?'' என்று கேட்டான்.

அதற்கு அந்த ஆசாமி, ''ஆரம்பத்தில் நான் பேச்சிலராக இருந்தபோது, பத்து ரூபாய் கொடுத்தேன். திருமணம் ஆன பிறகு ஐந்து ரூபாய் கொடுத்தேன். குழந்தை பிறந்ததால் இப்போது இரண்டு ரூபாய் கொடுக்கிறேன்'' என்றான்.

உடனே பிச்சைக்காரன் சொன்னான்:

''அப்போ, என் காசிலே குடும்பம் நடத்தறீங்கன்னு சொல்லுங்க!''



**ஜி.லக்ஷ்மிபதி**

# SMS கதைகள்

அதிகாரி ஒருவர், தினமும் மின்சார ரயிலில் முதல் வகுப்பில் பயணம் செய்வார். கைக்குட்டை விற்கும் சிறுவன் ஒருவன் அவரிடம், ''ஸார் மூன்று கைக்குட்டை பத்து ரூபாய். வாங்கிக் குங்க'' என்றான்.

பரிதாபப்பட்ட அவர், ''இந்தா'' என்று பத்து ரூபாயை நீட்டினார். ''எனக்குக் கைக்குட்டை எதுவும் வேண்டாம். நீயே இதை வைத்துக் கொள்'' என்றார்.

அவனைப் பார்க்கிறபோதெல்லாம் இப்படி பத்து ரூபாய் கொடுத்துவிடுவார். கைக் குட்டை எதுவும் வாங்க மாட்டார்.

ஆறு மாதங்களுக்குப் பின் ஒரு நாள், அவனைப் பார்த்தவுடன் பர்ஸில் இருந்து பத்து ரூபாயை எடுத்து அவனிடம் நீட்டி னார்.

உடனே சிறுவன் சொன்னான்:

''என்ன ஸார் இது? இன்னமும் பத்து ரூபாயைத் தர்றீங்க! கைக்குட்டை விலை ஏறி எவ்வளவு நாளாச்சு?''



முதியவரிடம் இளைஞன் சொன் னான்:

''இன்றைய இளைஞர்களை உங்க ளால் புரிந்துகொள்ள முடியாது. தலைமுறை இடைவெளி அதிகம். நீங்கள் வாழ்ந்த காலம் வேறு; நாங்கள் வாழும் காலம் வேறு. இப்போதுதான் எத்தனை வசதிகள் - தொலைக்காட்சி, ஜெட் விமானங்கள், விண்வெளிப் பயணம், அணுசக்தியின் பயன்பாடு, கணினி, இணையதளம்... இவற்றையெல்லாம் நீங்கள் கேள்விப்பட்டிருக்க முடியாது.''

அடுக்கிக் கொண்டே போன இளைஞனிடம் முதியவர் சொன்னார்:

''உண்மைதான்! நாங்கள் வாழ்ந்த அந்தக் காலத்தில் இவை எல்லாம் இல்லை. எனவே இவற்றை 'நாங்கள்' கண்டுபிடித்தோம்.''



'கோத்தி' குறும் படத்தின் கதை: ஆணாக இருந்து பெண்ணாக மாறிய ஒரு திருநங்கையின் கதை.

**திரைக்கதை:** ஊரில் இருக்கும் அப்பா, அம்மா, அக்காவைப் பார்ப்பதற்காக பஸ்ஸில் வருகிறாள் வளர்மதி. அவள் பழைய நினைவுகளை அசைபோட, காட்சிகள் விரிகின்றன. அவள் நிஜப் பெயர் அன்பு. சிறு வயதிலேயே, ஆணாக இருந்தாலும் தனக்குள் ஒரு பெண் ஒளிந்திருப்பதை அடையாளம் கண்டுகொள்கிறான் அன்பு. வளையல்களை அணிந்து அழகு பார்க்கிறான். ஆண்கள் விளையாடும் விளையாட்டுகளை விளையாடாமல், பெண் பிள்ளைகளோடு சேர்ந்து பல்லாங்குழி, பாண்டி ஆடுகிறான். நாளாக ஆக, நடை, உடை, பாவனையில் பெண் சாயல் வந்து அப்பட்டமாக ஒட்டிக் கொள்கிறது. குளிக்கும்போது மஞ்சள் பூசிக்கொள்கிறான். வீட்டில் யாரும் இல்லாத ஒரு சமயத்தில், அக்காவின் புடைவை, ஜாக்கெட்டை எடுத்து அணிந்து அழகு பார்க்க, அப்பா அதைப் பார்த்து விடுகிறார். 'பொட்டை! இனிமே நீ இங்க இருக்கக்கூடாது. வெளியே போடா!' என்று அடித்து விரட்டுகிறார். அனாதரவாகத் தெருவில் நிற்கும் அன்புக்கு, சில அரவாணிகள் அடைக்கலம் தருகிறார்கள். அவர்களோடு சேர்ந்து ரோட்டில் கைதட்டி, பிச்சை எடுக்கிறான். அவனுக்கு 'நிர்வாணம்' என்று சொல்லப்படும் அறுவை சிகிச்சை நடக்கிறது. முழுப் பெண்ணாக, வளர்மதியாக மாறுகிறான். சக தோழிகளிடம் சொல்லிக்கொண்டு வீட்டுக்கு வருகிறாள் வளர்மதி. இப்போதும் அப்பா, அவளை உள்ளே விட மறுக்கிறார். சகோதரியின் திருமணம் தடைப்பட்டுவிடும் என்று காரணம் சொல்கிறார். கதவை அடைத்துவிடுகிறார். அம்மா, ஜன்னல் வழியே அவள்

# கல்லுக்குள்



## குறும்படம்

படித்த சர்டிபிகேட்டு களை நீட்டுகிறாள். எத்தனையோ நிறுவனங்களில் ஏறி இறங்கினாலும், வளர்மதி ஒரு திருநங்கை என்கிற காரணத்தினாலேயே வேலை மட்டும் கிடைக்க மாட்டேனென்கிறது.

**வசனம்:** திருநங்கையாக மாறிய அன்பு, ''ஒரு பொண்ணா இருந்துக்கிட்டு என்னால ஆம்பளை வேஷம் போட முடியலைண்ணே!'' என்பது போன்ற எளிமையான, அதேசமயம் நம்மை உறைந்து போகச் செய்யும் வசனங்கள்.




**இயக்கம்:** சி.ஜெ. முத்துக்குமார். கள்ளக்குறிச்சிக்குப் பக்கத்தில் 'மண்மலை' என்ற கிராமத்தைச் சேர்ந்தவர். விவசாயக் குடும்பம். இயக்குநர் தங்கர்பச்சானின் உதவியாளர். கைபேசி: 98411 66519.

**இசை:** கதைக்குப் பொருத்தமான, ஆர்ப்பாட்டமில்லாத, உயிரை உலுக்கும் இசையைத் தந்திருக்கிறார் அனுப்.

**தயாரிப்பு:** குறும்படம் எடுப்பதால் எந்த வருமானமும் கிடைக்கப் போவதில்லை என்று தெரிந்திருந்தும் 65,000 ரூபாய் செலவழித்திருக்கிறார் தாம்பரத்தைச் சேர்ந்த பிரதீப்குமார்.

**ஒளிப்பதிவு:** மாபொ ஆனந்த். இவருடைய கடும் உழைப்பு ஒவ்வொரு ஃப்ரேமிலும் தெரிகிறது.

**நடிப்பு:** வளர்மதி பாத்திரத்தில் நிஜ திருநங்கை வெண்ணிலா நடித்திருப்பது கூடுதல் பலம்.

**விமர்சனமாய் ஒரு கேள்வி!:** தமிழில் வெளி வந்திருக்கும் குறும்படங்களிலேயே திருநங்கைகள் குறித்த சப்ஜெக்ட்தான் மிக அதிகம். நீங்களும் அதையே எடுக்கணுமா இயக்குநர் ஸார்?

**ஏற்புரையில் பதிலாக (சி.ஜெ. முத்துக்குமார்):** ''அரவாணிகள் கௌரவமா வாழணும்னு நினைச்சாலும் அப்படி வாழ இந்தச் சமூகம் அனுமதிக்கறதில்லை. ரேஷன் கார்டுக்குப் போய் நின்னா, 'நீங்க பேச்சலர் தானே! உங்களுக்கு எதுக்கு?'ன்னு குதர்க்கம் பேசறாங்க. இப்போ அரசாங்கம் ரேஷன் கார்டு கொடுக்குதுன்னாலும் அதனால பயன் அடையறவங்க ரொம்பக் கம்மி. அரவாணிகளோட முக்கியமான பிரச்னை, என்ன படிச்சிருந்தாலும், அவங்களுக்குச் சுலபமா வேலை மட்டும் கிடைக்க மாட்டேங்குது. நல்ல வேலை கிடைச்சாத்தானே அவங்க கௌரவமா வாழ முடியும்? யாரோ, ஒண்ணு, ரெண்டு பேருக்குக் கிடைச்சிருக்கலாம். பொதுவா, பெரும்பாலானவங்க பொருத்தமான வேலை இல்லாம, தங்களுக்குள்ளேயே சுருங்கிப் போயிருக்காங்கன்னுதான் சொல்லணும். இதை விளக்கமா, அவங்களோட வேதனையும் வலியும் கொஞ்சம்கூட குறையாம மக்களுக்குச் சொல்லணும்னு நினைச்சேன். இந்தப் படத்தை எடுத்தேன். இதைப் பார்த்துட்டு, சில நல்ல உள்ளம் படைச்சவங்க, திருநங்கைகளுக்கு வேலை கொடுக்க முன் வந்திருக்காங்க. அதை நான் பெரிய வெற்றியா நினைக்கிறேன்.''

✱ சி.ஜெ.முத்துக்குமார்



**- பாலுசத்யா**

# வண்ணத் தூரிகை

கொழும்புவிலிருந்து கண்டிக்குப் போகும் சாலையில் பிரயாணம் செய்யும் போது, உண்மையில் நாம் ஏதோ சொர்க்க லோகத்தில் பிரயாணம் செய்வதாக நினைத்துக்கொள்வோம். அவ்வளவு அழகும் வசதியும் பொருந்திய சாலையை இந்தியாவில் நாம் எங்கும் பார்க்க முடியாது. வழ வழப்பான கறுப்புச் சலவைக்கல் போட்டது போன்ற சாலை; ஓர் அப்பழுக்கு அதில் எங்கும் காண முடியாது. இரண்டு புறத்திலுமோ ஒரே பசுமைக் காட்சி, பசிய மரங்கள், அல்லது செடிகள், பச்சைப் பசேலென்ற மலைக் காட்சிகள், இல்லாவிட்டால் பசுமையான வயல்கள். கண்ணுக் கெட்டிய தூரத்தில் பசுமையில்லாத எந்தப் பொருளையும் பார்க்கவே முடியாது.



ஆங்காங்கே, தோட்டங்களுக்கு மத்தியில் சிறுசிறு குடிசை வீடுகளையும் பார்க்கலாம். அவை குடிசைகளானாலும், அத்தகைய அழகான இயற்கைக் காட்சிகளுக்கு மத்தியில் அமைந்திருப்பதால், அவற்றில் வாழும் ஜனங்கள் நமக்குத் தேவலோகவாசிகளாகவே தோன்றுகிறார்கள். இதில் ஓர் அபாயமும் இருக்கத்தான் செய்கிறது. தேவலோகம், தேவர்கள், தேவியர்கள் என்று நீங்கள் எண்ணமிட்டுக் கொண்டே போகும் போது, சாலை ஓரத்தில் சிறு பந்தலின் அடியில் கவலை தேங்கிய முகத்துடன் உட்கார்ந்திருக்கும் பெண் உங்களுக்கு ஒரு தேவகன்னிகையாகவே தோன்றுகிறாள். அவள் யார்? ரம்பையா, ஊர்வசியா, மேனகையா, திலோத்தமையா? ஒருவேளை சாக்ஷாத் இந்திராணி அல்லது தேவிகா ராணியாகத்தான் இருக்குமோ? எதற்காக அப்படி வாட்டமான வதனத்துடன் உட்கார்ந்திருக்கிறாள்? பூலோகத்தில் போய்ப் பிறக்கும்படியாக எந்தக் கோபம் கொண்ட ரிஷியாவது சாபங்கொடுத்து விட்டாரோ என்ற தெரிந்து கொள்ளவிரும்புகிறீர்கள்.

உடனே உங்கள் மோட்டார் விமானம் நிற்கிறது. நீங்கள் அந்தப் பெண்ணைப் பார்க்கிறீர்கள். அவளும் உங்களைப் பார்க்கிறாள். கண்ணோடு கண் சந்திக்கிறது. அவள் தன் பீடத்திலிருந்து எழுந்து உங்கள் அருகில்

வருகிறாள். அப்போதுதான் உங்களுடைய அபாயமான நிலையை உணருகிறீர்கள். ''ஆ! பெண் பேயே! என்னை உன் மோக வலையில் சிக்க வைக்கலாமென்றா பார்க்கிறாய்? போ! தூரப் போ!'' என்று முன்னொரு நாள் விசுவாமித்திரர் மேனகையைப் பார்த்து அதட்டியதுபோல நீங்களும் அதட்டுகிறீர்கள். ஆனால், இந்த மேனகை ஒரு புன்சிரிப்பு சிரிக்கிறாள். நிலைமை இப்போது நெருக்கடியாகி விடுகிறது. உடனே வண்டியிலிருந்து இறங்கி விழுந்தடித்து ஓடப் பார்க்கிறீர்கள்.

கூட இருக்கும் இலங்கை நண்பர் உங்களைப் பிடித்துக்கொள்கிறார். ''ஏன் ஐயா! ஓர் அணாவுக்கு முந்திரிப் பருப்பு வாங்கினால்தான் என்ன? இதற்காக இப்படி மிரண்டு ஓடுவானேன்!'' என்கிறார். அப்போதுதான் பூலோகத்துக்கு வந்து, 'ஓகோ! இவள் ரம்பை ஊர்வசி வகையறாக்களில் ஒருத்தி இல்லையா? முந்திரிப் பருப்பு விற்கும் சிங்களப் பெண்தானா! பிழைத்தோம்' என்று ஆறுதல் பெறுகிறீர்கள்!

('கண்டேன் கண்டியை'
பயணக் கட்டுரையிலிருந்து...)



ஐஸ்வர்யா ராயின் முதல் படமான அவுர் பியார் ஒகையாவிலிருந்து விலகி, இரண்டு வாரங்கள் இருக்கும். மும்பையிலிருந்து மிகப் பிரபலமான வீனஸ் பிக்சர்ஸ் நிறுவனத்தின் ரத்தன் ஜெயின் ஃபோன் செய்தார். அடுத்து அவர்கள் மன்சூர் கான் இயக்கத்தில் தயாரிக்கும் 'ஜோஷ்' படத்துக்கு நான் ஒளிப்பதிவாளராகப் பணியாற்ற வேண்டும் என்று கேட்டார். மன்சூர் கான் பெயரைக் கேட்டதும் எனக்கு இன்ப அதிர்ச்சி! அவர் இயக்கி சூப்பர் டூப்பர் ஹிட் ஆன படம் 'கயாமத் சே கயாமத் தக்', சென்னையிலும் பெரிய அளவில் ஹிட் ஆனது. ரத்தன் ஜெயினையும் மன்சூர் கானையும் சந்திக்க மும்பை சென்றேன்.

மன்சூர் கான் இந்திய சுதந்திரப் போராட்டத்தில் மகாத்மா காந்தியுடன் இருந்த மௌலானா அபுல் கலாம் ஆசாத் குடும்பத்தைச் சேர்ந்தவர். பாராளுமன்ற ராஜ்யசபாவின் துணைத் தலைவராக இருந்த நஜ்மா ஹெப்துல்லா, மன்சூர் கானின் அத்தை. தவிர, ஹிந்தி ஸ்டார் ஆமிர்கானின் ஒன்றுவிட்ட சகோதரர். அமெரிக்காவில் படித்த ஸாஃப்ட்வேர் என்ஜினீயர். சினிமா மீது கொண்ட ஆழமான காதல் காரணமாக டைரக்டர் ஆனவர்.

ஜோஷ் படத்துக்கு கேமராமேனாக என்னை எப்படித் தேர்ந்தெடுத்தார்கள் என்பதுகூட சுவாரஸ்யமானதுதான். 'காதல் தேசம்' படத்துக்கு இசை ஏ.ஆர்.ரஹ்மான். ஹீரோயின் தபு என்பதால், அதை ஹிந்தியில் வெளியிடுவதற்காக வீனஸ் பிக்சர்ஸ் நிறுவனத்தினர் வாங்கி இருந்தார்கள். 'ஜோஷ்' படத்தின் கதைப்படி ஷாருக் கானுக்கு, ஐஸ்வர்யா ராய் சகோதரி. எனவே, ஐஸ்வர்யா ராய்க்கு ஜோடியாக நடிக்க அத்தனை பிரபலமில்லாத ஒரு நடிகர் வேண்டி இருந்தது. அந்த ரோலுக்கு 'காதல் தேசம்' படத்தில் நடித்திருந்த அப்பாஸ் பொருத்தமாக இருப்பாரா என்று பார்க்கத்தான், இயக்குநர் மன்சூர் கானுக்கு






## கே.வி.ஆனந்த்

அந்தப் படத்தைப் போட்டுக் காட்டினார் ரத்தன் ஜெயின். ஆனால், படம் பார்த்து விட்டு வெளியில் வந்தவுடன் இயக்குநர் முதலில் சொன்னது: ''இந்தப் படத்தில் கேமரா மேன்தான் என் ஜோஷ் படத்துக்கு வேண்டும்.''

மும்பையில் மன்சூர் கானைச் சந்தித்த போது, அவர் பியார் ஒகையா படத்தி லிருந்து பத்து நாட்களில் வெளியேறிய அனுபவத்தைச் சொன்னேன்.

நான் பேசியதையெல்லாம் உன்னிப் பாகக் கவனித்துக் கொண்டிருந்துவிட்டு, மன்சூர் கான் சொன்னார், ''உங்களை மாதிரி ஒரு கேமராமேன்தான் எனக்குத்



# "சாக்லேட் சாப்பிடாம பார்த்துக்கோ..."

தேவை. ஆனா இங்கே அதுமாதிரி யாரும் கிடைக்கலை; கதை டிஸ்கஷனுக்கும், லொகேஷன் பார்க்கவும் கேமராமேனைக் கூப்பிட்டால், நழுவிடறாங்க. உங்களோட அப்ரோச் எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு; நீங்க சொன்ன எல்லாம் எனக்கு ஓ.கே. நாம ரெண்டுபேரும் சேர்ந்து இந்தப் படத்துல வொர்க் பண்றோம்'' என்றார்.

**ம**ன்சூர் கானின் அம்மா ஒரு மறக்க முடியாத கேரக்டர். தன் மகன் மன்சூருக்கு 34 வயது என்று கூடப் பார்க்காமல் மகன் மீது பாசத்தைக் கொட்டவும், கண்டிப்பு காட்டவும் செய்தார்.

''கே.வி! நீ கேமராவை மட்டும் கவனிச்சா போதாது! இவன் ரெண்டு சாக்லேட்டுக்கு மேல் தின்னாமல் இருக்கிறானான்னும் கவனிச்சுக்கோ!'' என்று சொல்வார். மன்சூர் ஒரு மெகா சாக்லேட் ப்ரியர். மதிய நேரங்களில் சாப்பாட்டுக்குப் பதிலாக ஃபைவ் ஸ்டார் சாக்லேட் பார்க ளாகவே ஒரு கை பார்த்துவிடுவார். பிரேக் நேரம் என்றால், ஃபைவ் ஸ்டாரும் கையு மாகத்தான் இருப்பார்.

**ஜோ**ஷ் படத்துக்கு ஏ.ஆர். ரஹ்மான் இசையமைக்க வேண்டும் என விரும் பினார் மன்சூர் கான். சென்னைக்கு வந்து ரஹ்மானைச் சந்தித்துப் பேசினார். ஏற் கெனவே கையில் ஐந்தாறு படங்கள் இருந் தாலும், மன்சூர் மீது கொண்ட மதிப்பால் ரஹ்மான் இசையமைக்க ஒப்புக் கொண் டார். படத்தின் பூஜையன்று மன்சூர் கான்,

ஏ.ஆர்.ரஹ்மான் பெயரோடு என் பெயரையும் சேர்த்து வைத்திருந்த பேனரைப் பார்த்தபோது பெருமையாக இருந்தது.

மும்பை பீச்சில் பிரமாண்டமான ஒரு தேவாலயத்தில் படத்தின் இரண்டரை பாடல்கள் போல படமாக்குவதாகத் திட்டம். அதற்காக கோவாவில் இருக்கும் ஒரு மிகப்பெரிய சர்ச்சை மாடலாக வைத்து செட் உருவாக்கப்பட்டது. தொண்ணூறுகளிலேயே அந்த செட்டுக்காக இரண்டு கோடி செலவு செய்தார்கள்!

ஏப்ரல் மாதத்திலாவது ரஹ்மானிடமிருந்து பாடல்களுக்கான டியூன் வந்து சேர்ந்துவிடும் என எதிர்பார்த்து மொத்த யூனிட்டே காத்திருந்தது. மே மாதத்தில் மும்பையில் பருவ மழை ஆரம்பித்துவிடும். மழைக் காலத்தில் ஷூட்டிங் நடத்த முடியாது என்பது மட்டுமில்லை; இரண்டு கோடி செலவு செய்து போடப்பட்ட செட் மொத்தமும் பாழாகிவிடும். டைரக்டர் டென்ஷனின் உச்சகட்டத்தில் இருந்தார்.



**ஜோஷ் படத்துக்கு ஏ.ஆர்.ரஹ்மான் இசையமைக்க வேண்டும் என விரும்பினார் மன்சூர் கான். ஆனால் டியூன் போட்டது அனுமாலிக்தான்.**



* 'ஜோஷ்' படத்தில்...

ரஹ்மானுடன் பேசி நிலைமையை விளக்கினார். ரஹ்மான், ''உங்கள் அவசரம் எனக்குப் புரிகிறது. ஆனால், சுதந்திரமாக கால அவகாசம் எடுத்துக் கொண்டு இசை அமைத்தால்தான் ரிசல்ட் நன்றாக இருக்கும். இப்போதுள்ள வேலைப் பளுவில் அது ரொம்பவும் கஷ்டம்'' என்று நிலைமையை எடுத்துச் சொன்னார். டைரக்டரது அவசரத்துக்கு டியூன் போட்டுத் தருகிற சூழ்நிலையில் ரஹ்மான் இல்லை என்பது தெளிவானது.

வேறு வழி இல்லாமல், ஏப்ரல் மாதத்துக்குள் பாடல் காட்சிகளை எடுத்தே தீர வேண்டும் என்ற கட்டாயமான சூழ்நிலையில், மன்சூர் கான், இசையமைப்பாளர் அனுமாலிக்கை அணுகி, உடனடியாக டியூன்களைப் போட்டு வாங்கி, திட்டமிட்டபடி பாடல் காட்சிகளை எடுத்து முடித்தார்.

(ஆக்ஷன் தொடரும்)

எழுத்து வடிவம் : **எஸ்.சந்திரமௌலி**

# தெரியாமத்தான் கேட்கறேன்

## சுருளிப்பட்டி தைலா



**பா**ல் விலை உயர்வால் டீ, காபி விலை திடீர் உயர்வு

*காப்பி கோப்பை அளவு சரிவுன்றதை எந்த பேப்பர்லயாச்சும் போட்டாங்களா?*

**பா**தாளச் சாக்கடையில் மனிதர்கள் இறங்குவதைத் தடுப்பது எப்படி?

- ஆராய உயர்நீதிமன்றம் உத்தரவு.

*பேசாம சாக்கடைகளை பழையபடி ரோட்டு மேலேயே ஓடவிட்டுட்டா யாரும் உள்ளே இறங்க வேண்டியிருக்காதுன்னு தீர்வு சொல்வாங்களோ?*

**போ**லீஸ் போல் நடித்து, செல்போன் வியாபாரியிடம் ரூ.50,000 பறிப்பு.

*நடிப்புத்தான்னு உறுதியா தெரியுமுங்களா?*

**அ**ரசின் வசம் ஐந்துகோடி டன் அளவுக்கு உணவு தானியங்கள் கையிருப்பு உள்ளது.

- பிரதமர்

*அதிலே எவ்வளவு கிலோ சாப்பிடக் கூடிய தரத்துல இருக்குமாம்?*

**வி**லைவாசி உயர்வால் நாடு கஷ்டமான நிலைமையை எதிர்நோக்கியுள்ளது.

- சோனியா காந்தி

*விலைவாசியைச் சமாளிக்க புது மானியம் அறிவிப்பீங்களா?*

**போ**லி குடும்ப அட்டைகள் இல்லாத நிலையை உருவாக்க மக்கள் ஒத்துழைக்க வேண்டும்.

- எ.வ. வேலு

*போலி அட்டைகள் உருவாகறதுக்கு அவங்களா ஒத்துழைச்சாங்க?*

தலையில் முடி இல்லாவிட்டாலும் பிரச்னை, முகத்தில் தேவையில்லாமல் முடி இருந்தாலும் பிரச்னை என முடியினால் ஒரு முடிவில்லாத பிரச்னையை எதிர்நோக்கும் பலருக்கும், தாம் தயாரிக்கும் ஆயுர்வேத மூலிகை எண்ணெய் மற்றும் பொடிகள் கொண்டு தீர்வு சொல்கிறார் மஹாலக்ஷ்மி வெங்கடேஷ்.



# முடியுமா... முடிப் பிரச்னை?

"இப்போது நாம் சாப்பிடும் சாப்பாடு முதல் தலைக்கு உபயோகப் படுத்தும் எண்ணெய் வரை எல்லாவற்றிலுமே கலப்படம் அதிகமாகி விட்டது. விவசாய மண்ணில் கூட மண்ணைவிட அடிஉரம்தான் மேலோங்கி இருக்கிறது. ஒரு கத்தரிக்காய் காய்ப்பதற்குள் எத்தனை எத்தனை பூச்சிக் கொல்லி மருந்துகளையும், எத்தனை விதமான கெமிக்கல்களையும் தாங்கி இருக்குமோ தெரியாது. சுத்திகரிப்பு என்று நல்லெண்ணெயில் ஏதோ ஒரு கெமிக்கலைக் கலந்து அதன் தன்மையையே மாற்றி விடுகிறார்கள். பிறகு அதில் மணம் எப்படி இருக்கும்? எல்லாமே கெமிக்கல்மயமானதால்தான், தற்காலத்தில் சிறு பிராயத்திலிருந்தே அதிக அளவில் முடி கொட்டுதல், இள நரை போன்ற பிரச்னைகள் பெருகி விட்டன. குறிப்பாக ஆண்களுக்கு இந்த முடி கொட்டும் பிரச்னை ரொம்பவே இருக்கிறது. அதற்குத் தீர்வு சொல்லும் விதமாகத்தான் நான் மூலிகைகள் கொண்டு எண்ணெயும் பொடியும் தயாரித்து அளித்து வருகிறேன்" என்கிறார் மஹாலக்ஷ்மி.

**பெண்கள் எந்த மாதிரியான பிரச்னைகளோடு உங்களிடம் வருகிறார்கள்?**

"பெண்களுக்கு முகத்தில் தேவையில்லாமல் முடி வளர்வதுதான் மிகப்பெரிய

பிரச்னை. இதனால் எனக்குத் தெரிந்து சில குடும்பங்கள் விவாகரத்துவரை கூட வந்துவிடுகின்றன. ஒரு பெண்ணுக்கு மேல் உதட்டிலும், தாடையிலும் இருக்கும் தேவையற்ற முடிகளை அகற்றவும்தான் நான் தயாரிக்கும் மூலிகைப் பொடி, எண்ணெய்கள் பயன்படுகின்றன. முன்பெல்லாம் மஞ்சள் தேய்த்துக் குளிப்பது என்ற வழக்கத்தைப் பெண்கள் கடைப் பிடித்து வந்தார்கள். இன்றைய சூழலில் பெண்கள் வெளியில் செல்ல வேண்டி இருப்பதால் மஞ்சள் தேய்த்துக் குளிப்பதற்கு நேரமோ மனமோ இருப்பதில்லை. உடையில் மஞ்சள் கறை படியும் பிரச்னை வேறு. கஸ்தூரி மஞ்சளை தாராள மாகப் பெண்கள் உபயோகப்படுத்தலாம், அது நிச்சயம் உடையில் ஒட்டவே ஒட் டாது.''



**தலை அல்லது முடி பராமரிப்புக்கு நீங்கள் சொல்லும் எளிய டிப்ஸ்?**

''ஷாம்பூ போட்டுத் தேய்த்துக் குளிப் பதை எல்லோருமே நிறுத்த வேண்டும்.. ஒரு ஷாம்பூ பாட்டிலை எடுத்து நீங்கள் நன்கு ஆராய்ச்சி செய்து பார்த்தீர்களானால், மிகச் சின்ன எழுத்தில் பேஸ் (base) என்று அதில் சலவை சோப்புக்கு உபயோகப்படுத் தும் அதே பொருட்களைப் போட்டிருப்பார் கள். சலவை சோப்பில் நுரைக்கென உபயோகப்படுத்தும் அதே பொருள்தான் நாம் தலைக்கு உபயோகிக்கும் ஷாம்பூ விலும் கலக்கிறார்கள். தலைக்கு எப்படி எண்ணெய் வைக்க வேண்டும், எவ்வளவு நேரம் ஊற வேண்டும், எப்படித் தண்ணீர் ஊற்ற வேண்டும், எவ்வளவு நேரம் அலச வேண்டும் என எல்லாவற்றுக்குமே ஒரு விதிமுறை இருக்கிறது. அந்தக் காலத்தில் ராணிகள் தலைக்குக் குளிக்கப் போவதற்கு முன் அதற்கேற்றாற் போல வெந்நீரைத் தயார்ப்படுத்துவார்களாம். அப்படித்தான் நாமும் தலையைப் பார்த்துப் பார்த்துப் பரா மரிக்க வேண்டும். நம் முகத்துக்கு அழகு சேர்ப்பதே முடிதானே. அதற்கான பரா மரிப்புக்கென தினம் அரை மணி நேர மாவது ஒதுக்குவதைப் பழக்க மாக்கிக் கொள்ளவேண்டும்'' என்கிறார் பதினைந்து வருடங் களாக ஆயுர்வேத எண்ணெய் மற்றும் மூலிகைப் பொடிகள் தயாரித்து வரும் மஹாலக்ஷ்மி வெங்கடேஷ்.

**- நளினி சம்பத்குமார்**

# நடனமாடும் அண்ணாவின்

## வே.எழிலரசு

செய்தித்தாளின் வலது மூலையில் அச்சிடப்பட்டிருந்த அந்தப் படத்தையே உற்றுப் பார்த்தார் இளஞ்சேட் சென்னி.

'கண்ணீர் அஞ்சலி' என்று கொட்டை எழுத்துகளோடும் 'தோற்றம்' , 'மறைவு' என்று தேதிகள் குறிப்பிட்டும் அச்சிடப்பட்டிருந்த அந்தப் படத்தைப் பார்த்துக் கொண்டிருந்த இளஞ்சேட் சென்னி தமது வழுக்கைத் தலையை தடவிக்கொண்டார்.

செய்தித் தாளை உற்றுப் பார்த்தார். 'இதோ இருக்கே! அந்தத் தழும்பு என்னால் ஏற்பட்ட தழும்பு... அப்படியே இருக்கே...' என்று முணுமுணுத்தார். அவரின் முகத்தில் குற்ற உணர்வின் ரேகைகள் பரவின. இவனது மரணச் செய்தி என்னை ஏன் இன்னும் அதிர வைக்கவில்லை... என்று யோசித்தார்! என்ன இருந்தாலும் ஒரு காலத்தில் என் நண்பன் அல்லவா இவன் - சூழல்கள் இவனைப் பகைவனாக மாற்றிவிட்டாலும்... பகைவனாக இருந்தாலும் இவனும் என் வாழ்வுப் பயணத்தின் அங்கமல்லவா?

இளஞ்சேட் சென்னியின் நினைவுகள் நாற்பத்தைந்து ஆண்டுகள் பின்னோக்கிச் சுழன்றன.

புலியூர் உயர்நிலைப் பள்ளியில் காலியாயிருந்த தமிழாசிரியர் பணிக்கு என்னை விண்ணப்பிக்கச் சொன்னவன் என் நண்பன் நட்ராஜ்தான்.

நகரத்துக்கு அருகாமையிலிருந்த அந்தப் பள்ளியும் அந்த ஊரும் என் ரசனையை ஆற்றுப்படுத்தின. எங்கள் கிராமத்துப் பெண்களைவிட இந்த ஊர்ப்பெண்கள் வசீகரமாகத் தெரிந்தார்கள். குறிப்பாக பதினொன்றாம் வகுப்பு 'ஏ' பிரிவில் பயிலும் பூங்குழலி. அவள் விழிகளில் உருளும் கருப்பு திராட்சைகள், நான் பாடம் நடத்தும்போது, என் மீது ஊரும் அவளின் பூவருடல் பார்வைகள் - ஆயுள் முழுக்க, இந்தப் பள்ளியிலேயே இருந்து விடலாமா... என்று எண்ண வைக்கும். அடச்சே! வடிகட்டிய மடையனாக இருக்கிறேனே! பூங்குழலி இந்தக் கல்வி ஆண்டு முடிந்ததும், இந்தப் பள்ளியை விட்டு கல்லூரிக்குப் போய் விடுவாளே...!

'டேய் சேட்டு உங்க தலைவர் உருவத்தைப் பொறிச்ச மோதிரத்தைப் போட்டிருக்க, சரி ஆசைப்பட்டு செஞ்சு மாட்டிக்கிட்ட - நான் வேண்டாம்னு சொல்லல... ஆனா.. ஸ்கூலுக்கு அதை மாட்டிக்கிட்டு வந்துடாதே...!'

நட்ராஜின் அறிவுரை பள்ளிக்கு அருகே வந்ததும் காதுகளில் ஒலிக்கும். சைக்கிளைப் பூட்டிய கையோடு, மோதிரத்தைக் கழற்றி பாக்கெட்டில் போட்டுக்கொள்வேன்.

நட்ராஜ் ஒரு வாரம் விடுப்பு எடுத்துக் கொண்டு கிராமத்துக்குப் போயிருந்தபோது, பள்ளிக்கூடத்தின் காலை நேரப் பிரார்த்தனைக் கூட்டத்தில் நான் பேச நேர்ந்தது.

விடுப்பு முடிந்து பணிக்குத் திரும்பிய நட்ராஜிடம் தலைமை ஆசிரியர், ''நட்ராஜ் இனிமேல் காலைநேர வழிபாட்டுக் கூட்டங்களில் சென்னியே பேசட்டும்'' என்றார்.

நட்ராஜின் முகத்தில் ஆத்திரம் அப்பட்டமாகத் தெரிந்தது. ''யாரு இளஞ்சேட் சென்னியா... அவன்...ஸாரி... அவர் நாத்திகராயிற்றே...?''

தலைமை ஆசிரியருக்கு அது ஒரு அதிர்ச்சியான தகவலாக இருந்திருக்க வேண்டும். 'அப்படியா?' என்பதுபோல் என்னைப் பார்த்தார். பின் என்ன நினைத்தாரோ தெரியவில்லை. ''அதனால் என்ன திருமூலர் பற்றியும் வள்ளலார் பற்றியும் இவர் சொன்ன

விஷயங்கள் மாணவர்களுக்குத் தேவையான ஒன்று. அது தொடர வேண்டும்'' என்று சொல்லிவிட்டு நகர்ந்துவிட்டார்.

நட்ராஜ் என் பக்கம் திரும்பி, ''என்ன சேட்டு இப்படிப் பண்ணிட்டியே?'' என்றான்.

நான் பதற்றத்துடன் அவன் கைகளைப் பற்றி, ''நட்ராஜ் இதில் என் தவறு என்று எதுவும் இல்லை என்பதை நீ புரிந்துகொள்ள வேண்டும்'' என்றேன்.

நட்ராஜ் என் கைகளை உதறிவிட்டு ஆத்திரம் தணியாத குரலில், ''டேய் எல்லாம் தெரியும்டா, அந்த பிரின்ஸ்பால் அவன் ரூம்ல நாற்காலியில்கூட பத்மாசனத் திலதான் உட்காருவான். எழுதுற மேசையில



# சொற்கள்!

சர்க்கஸ் பண்ணுவான். எல்லாத்தையும் வாட்ச் பண்ணி, நல்லா திட்டம் போட்டு திருமூலரை வெச்சு பிரின்சிபாலைக் கவுத்துட்ட...''

''இல்லை நட்ராஜ்... நீ...''

''பேசாதடா... உனக்கு எப்ப இருந்துடா திருமூலரைத் தெரியும்... சாமி இல்லன்னு சொல்ற கும்பல்தானடா நீங்க...?''

''நட்ராஜ் வரலாறு புரியாம பேசாத... எங்க அண்ணா சொல்ற 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற தத்துவத்தின் மூலப் பிதாவே திருமூலர்தான்.''

''உம் தினா முனா கானா காரனாச்சே... உனக்கெல்லாம் பாலிடிக்ஸ் பண்ணக் கத்துத் தரணுமா என்ன?''

நட்ராஜ் என்னிடமிருந்து விலகி விலகிச் சென்றாலும், நான் அவனைத் தேடிப் போய் நித்தம் பேசி வருவேன்.

''சேட்டு எப்படா இந்த வேலைய விட்டுப் போகப் போற? உன் திறமைக்கு தீவிர அரசியலில் ஈடுபட்டு மேல மேல வரலாமே...! இந்த வாத்தியார் வேலைல நீ என்ன அப்படிப் பெரிசா சாதிச்சுட முடியும்?'' என்று திடீரென்று கேட்டான் நட்ராஜ்.

''.........''

''நீ வந்த பிறகு பள்ளிக்கூடத்திலே எனக்கு இருந்த செல்வாக்கு டவுனாயிடுச்சு என்று வருத்தப்பட்டு நான் இதைச் சொல்லலடா...'' என்று பெரிதாகச் சிரித்தான்.

உடற்பயிற்சி ஆசிரியர் பள்ளிக்கு வர

வில்லை. மழை பெய்துகொண் டிருந்தது. மாணவ மாணவியரை வகுப் பில் அமர வைத்து ஏதாவது பொது விஷயங்கள் பேசச் சொன்னார் தலைமை ஆசிரியர்.

மறுநாள் என் அறைக்கு வந்த நட்ராஜ், ''என்ன சேட்டு, நேத்து கிளாஸ்ல அண்ணா துரை பத்தி ஏதோ சொன்னியாமே... ஸ்டாஃப் ரூம்ல எல்லோரும் பேசிக்கிட் டாங்க.''

''ஆமாம் நட்ராஜ். அண்ணாவின் சிறு கதைகள்ல இருக்கிற கதாபாத்திர வார்ப்பு பற்றி சொல்லிக்கிட்டிருந்தேன். பசங்க ரொம்ப ரசிச்சுக் கேட்டாங்க''

''பையன்கள் மட்டும்தானா... இல்ல...''

நட்ராஜ் ஏதோ விஷயத்தை மோப்பம் பிடித்துவிட்டான் என்பதை உணர்ந்து கொண்டேன்.

''நட்ராஜ் உன்கிட்ட ஒரு விஷ யம் சொல்லணும்.''

''....''

''பூங்குழலி, நேத்து, சார் நான் அடுக்குமல்லியை தலையில வெச்சிக் கறேன். உங்க அடுக்குமொழியை நான் மனசுல வெச்சிருக்கேன். ரெண்டுமே மணக்குது சார்ன்னு சொல்லிச்சு.''

''நீ பலே கெட்டிக்காரன்பா. நல்ல சொத்துபத்து உள்ள பார்ட்டியா பாத்துதான் வலை விரிக்கிற.''

எனக்கு நட்ராஜின் உளறல் அருவருப்பை ஏற்படுத்தியது.

அன்று கனவு இல்லாமலேயே எனக்குச் சிறகுகள் முளைத்துவிட்டன. எல்லாம் ஒரு அஞ்சல் அட்டை, அதில் இருந்த கையெழுத்து செய்த சித்துவேலை.

'ஆற்றல் மிகு தம்பி இளஞ்சேட் சென்னிக்கு அன்புமிகு வணக்கம் 'காஞ்சி' பொங்கல் மலர் வெளிவர இருப்பதை அறி வாய். அதற்கு உன் பங்களிப்பு அவசியம் தேவை. படைப்பை விரைவில் அனுப்பி வை. இப்படிக்கு உன் அண்ணன் அண்ணா துரை.'

இந்த ஆனந்தச் செய்தியை யாருடனாவது பகிர்ந்துகொள்ள வேண்டுமென்ற துடிப்பு நொடிக்கு நொடி அதிகரித்தது. 'நட்ராஜ் இந்த இளஞ்சேட் சென்னி... நீ நினைப்பதுபோல் அற்ப சொற்பப் பேர்வழி அல்ல. பேரறிஞர் பெருந்தகை கடிதத் தொடர்பு கொள்பவன் அறிந்து கொள்க. சொல்லேருழவன் பகை கொள்ளற்க' என்று அவனுக்கு உணர்த்தியாக வேண்டும்.

நான் எதிர்பார்த்ததுபோலவே நட்ராஜ் அந்த அஞ்சலட்டையில் உள்ள அண்ணாவின் கையெழுத்தைப் பார்த்து கண்கள் விரிய நின்றான். சட்டென்று சமாளித்துக்கொண்டு, ''சேட்டு ஆறு மாசத்துக்கு முன் னால 'காஞ்சி' இதழ்ல உன் கவிதை வந்திருந்தது இல்ல? அதுதான் திராவிட நாடு,



காஞ்சி மன்றம், மறவர் மடல், முரசொலி. இப்படி ஏதாவது ஒண்ணுல எதையாவது ஒண்ணை எழுதிட்டா போதும். அவங்க உன் பேரையும் முகவரியையும் குறிச்சு வெச் சிருந்து, ஞாபகமா அடுத்தமுறை எழுதிடு வாங்க. உன்னை மாதிரி பல பேருக்கு அண்ணாதுரை எழுதியிருப்பாரு. இதெல் லாம் ஒரு பொலிட்டிகல் மார்க்கெட் டிங்க்ப்பா..'' எனக்குச் சிரிப்பு வந்தது.

''சரி நட்ராஜ், நீயே சொல்லு. பொங்கல் மலருக்கு என்ன எழுதலாம்?''

''சேட்டு நீ கொடுத்த புஸ்தகத்தை யெல்லாம் அப்பப்ப படிச்சுப் பார்த்தேன். உங்க தலைவர் லேடீஸ் பத்தி எழுதற வர்ண

னையிலெல்லாம் ஒரு மயக்கம் வரத்தாம்பா செய்யுது... அதைப் பத்தி எழுதேன்.''

எனக்கு நட்ராஜைக் கட்டியணைத்து நன்றி சொல்ல வேண்டும்போல இருந்தது. தலைப்பை ஒழுங்கு செய்தேன். 'ஏந்திழைகளும் அண்ணாவின் எழில் வர்ணனைகளும்...'

வீடு திரும்பியதும் முதல் வேலையாக அண்ணாவின் 'ரோமாபுரி ராணிகள்' புத்தகத்திலிருந்து குறிப்புகளை எடுத்து டைரியில் எழுதத் தொடங்கினேன்.

**ம**றுநாள் மதிய உணவு இடைவேளைக்குப் பிறகு வகுப்புகள் தொடங்கியபோது, ஏதோ விரும்பத்தகாத நிகழ்வு நடப்பது போன்று புறச்சூழல்களும் என் உள்ளுணர்வும் உணர்த்தின. தலைமையாசிரியர் அழைப்பதாக கடைநிலை ஊழியர் குப்பாரங்கம் சொல்ல, நான் தலைமை ஆசிரியர் அறைக்கு விரைந்தேன்.

அவரின் அறையில் விஞ்ஞான ஆசிரியர் ஜே.எஸ்.பால், பூங்குழலி இருவரும் நின்றுகொண்டிருந்தனர். கண்ணைக் கசக்கியபடி அழுதுகொண்டிருந்த பூங்குழலி என்னைப் பார்த்ததும், மெள்ள நாணத்துடன் புன்னகைத்தது போல இருந்தது.

தலைமையாசிரியர், ''வாய்யா... இளஞ்சேட்சென்னி... இதெல்லாம் வாத்தியார் வேலைல இருக்கிறவன் செய்யற வேலையாய்யா..!'' என்று சத்தம் போட்டு, தன் கையிலிருந்த நோட்டுப்புத்தகத்தை என் முகத்தின் மீது வீசி எறிந்தார்.

நான் நோட்டுப் புத்தகத்தை எடுத்துப் பார்த்தேன். பூங்குழலியின் ரிக்கார்ட் நோட்புக். அதில் துருத்திக் கொண்டிருந்தன எனது டைரியில் எழுதியிருந்த குறிப்புகள்.

எனது டைரியில் நான் எழுதிய பக்கம் யாரால் கிழிக்கப்பட்டது? அது எப்படி பூங்குழலியின் ரிக்கார்ட் நோட்புத்தகத்துக்கு வந்தது.

காகிதத்தில் அண்ணாவின் சொற்கள் நடனமாடிக் கொண்டிருந்தன. ஜாலக்காரி, சிங்காரி, சிரித்து சித்ரவதை செய்யும் சொகுசுக்காரி, வெறும் அலங்காரி மட்டுமல்ல. பலே கைகாரி, சாதுர்யமான பேச்சுக்காரி, சரசத்துக்கு அதிகாரி... சொற்கள்... சொற்கள்... என்னைக் களங்கமேற்படுத்த உருவான சொற்கள்... எப்படி? எப்படி? என் அறைக்கு சர்வ சுதந்திரமாக வந்து போகும் உரிமை படைத்தவன் நட்ராஜ் மட்டும்தானே?

அப்பொழுது நட்ராஜ் தலைமை ஆசிரியரின் அறைக்குள் வேகமாய் - ஒரு புயலைப் போல் பிரவேசித்தான். ''சார் இது அக்கிரமம்... அநியாயம்...''

நான் வேகமாக சட்டைப் பையிலிருந்த மோதிரத்தை எடுத்து அணிந்துகொண்டேன். நட்ராஜ் தனது வாக்கியத்தை முடிக்கும் முன்னரே என் இறுகிய முஷ்டி அவன் முகத்தை இலக்காக்கி முன்னேறியது. சொல்லற்றுப் போன என் சினத்தின் உக்கிரம் விரல்களுக்கு வலுவேற்ற, துருத்திக்கொண்டிருந்த மோதிரத்தின் முத்திரை, அவன் முகத்தை ரத்தக் களறியாக்கியது.

நட்ராஜ் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டான். என்னை வேலையை விட்டு நீக்கினார்கள்.

நான் இயக்கத்தை விட்டுவிட்டு, இந்தியாவை விட்டே வெளியேறினேன். வடு மறப்பதற்குப் பல மாதங்கள் ஆயின. மலேஷிய வானொலியில் பணியாற்றியபோது தாய்த் தமிழக அமைச்சர் ஒருவரைப் பேட்டி எடுக்கச் சென்றேன். அப்போதுதான் தெரிந்தது. நட்ராஜ்தான் மன்றவாணன் என்று பெயர்

மாற்றிக்கொண்டு கட்சியில் சேர்ந்து வாரியத் தலைவராகி இன்றைக்குப் பெரிய ஆளாகவும் ஆகிவிட்டிருப்பது. 'அண்ணாவின் பெயரை யாரெல்லாம் கொச்சைப்படுத்தினார்களோ... அவர்கள் இப்பொழுது அண்ணா உழுது பயிரிட்ட கழனியில் அறுவடைக்கு வந்திருக்கிறார்களோ... சே என்ன கேவலமான அரசியல்!' என்று மனத்தில் ஒரு குரல் ஒலித்தது. எதிர்க்குரலாக இன்னொரு குரல். 'ஏன் நட்ராஜ் மாறியிருக்கக் கூடாது. நான் தினம் தினம் அவனோடு நிகழ்த்திய உரையாடல்களின் தாக்கம் ஏன் அவனைப் பிற்காலத்தில் மாற்றியிருக்கக் கூடாது...?' நான் இந்த எதிர்க் குரலையே நம்புவதற்கு விரும்பினேன்.



இளஞ்சேட் சென்னி நினைவுச் சுமையின் களைப்பில் அப்படியே சாய்ந்து உட்கார்ந்தார்.

இளஞ்சேட் சென்னி நினைவுச்சுமையின் களைப்பில் அப்படியே சாய்ந்து உட்கார்ந்தார்.

வீட்டின் முன்னால் ஒரு கார் வந்து நிற்பதையும், அதிலிருந்து ஒரு முதிய பெண்மணி இறங்குவதையும் பார்த்து வரவேற்பதற்கு எழுந்து நின்றார். யாராக இருக்கும்? ரசிகையோ? வந்த பெண்மணி கைகுவித்து வணக்கம் சொன்னதோடு, கால் தொட்டுக் கும்பிடவும் கொஞ்சம் அதிர்ந்து போனார். என்ன இருந்தாலும் பழைய சு.ம.காரர் அல்லவா...? எதிரே அமரச் சொன்னார்.

எதிரே இருந்த நாற்காலியில் அமர்ந்த அந்தப் பெண்மணி, ''சார் என்னை அடையாளம் தெரியுதா?'' என்றார்.

'தெரியலை' எனத் தலையாட்டினார்.

'' நான்...பூங்குழலி''

இளஞ்சேட் சென்னிக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'அட... இப்படியெல்லாம் நிகழுமா?

எவள் தன் வசீகர வனப்பினால் என் வாலிபப் பருவத்தைச் சிதறடித்தாளோ... அவள் இதோ மூப்பும் திரையும் வளர்ந்து என் எதிரே பழுத்த பழமாக அமர்ந்திருக்கிறாள்? மனமே என்னை வழி நடத்து...!

இமைகளை மூடி மெல்ல ஆழ்ந்த மூச்சைப் பருகினார்.

''சார் நீங்க டீ.வியில பேச ஆரம்பிச்ச அன்னிக்கே நான் உங்களை அடையாளம் கண்டுபிடிச்சுட்டேன். அதக்கப்புறம் உங்க அட்ரஸைக் கண்டுபிடிக்கறது சிரமமா? இல்லை... ஆனா உங்ககிட்ட வந்து பேசறதுக்கு மனசுல தைரியம் இல்லை. சாகறதுக்குள்ள அதை எப்படியாவது உங்ககிட்டே சொல்லிடணும். இன்னிக்கு பேப்பர்ல நட்ராஜ் சாரோட மரணச் செய்தியைப் பார்த்ததுமே... இதுதான் சரியான நாள்னு முடிவு பண்ணி வந்துட்டேன்.''

இளஞ்சேட் சென்னி பூங்குழலியைப் பார்த்தார்.

''சார், அன்னிக்கு என் ரிக்கார்ட் நோட்ல, இருந்த காகிதங்களை, உங்க ரூம்ல வந்து உங்க அனுமதி இல்லாம எடுத்து வந்தது நான்தான்...''

பூங்குழலி அதற்கு மேல் சொன்ன வார்த்தைகள் இளஞ்சேட் சென்னியின் காதுகளில் விழவில்லை. கண்களில் கண்ணீர் வழிந்தது. உதடுகள் 'நண்பா...நண்பா...' என்று அரற்றின.

சாய்வு நாற்காலியிலிருந்து எழுந்தார்.

''சார், எங்க எழுந்துட்டீங்க...?''

''என் நண்பனுக்கு நான் என் கடைசி வணக்கத்தைச் சொல்லியாக வேண்டும்.''

''சார்... நானும் உங்ககூட வர்றேன்.'' ○

‘‘உலக சினிமாவின் முதல் ‘மில்லியன் டாலர்’ நடிகர் சார்லி சாப்ளின்தான். 1916-17ஆம் ஆண்டுகளில் ‘மியூச்சுவல்’ நிறுவனத்துக்காக இந்தத் தொகையைப் பெற்றார்...’’

நாங்கள் பார்த்துக் கொண்டிருந்த சார்லி சாப்ளின் பற்றிய ஆவணப்படத்தில் இந்தத் தகவல் சொல்லப்பட்டபோது, வியப்பாக இருந்தது.

என்னோடு வந்த பேராசிரியரும், இரண்டு மாணவர்களும் என்னைப் போலவே ஆச்சரியப்பட, ‘‘1916ஆம் ஆண்டில் இவ்வளவு பணம் என்றால் இன்றைக்கு அதன் மதிப்பு எவ்வளவு ஐயா?’’ என்று ஒரு மாணவர் என்னிடம் கேட்டார்.

‘‘இதோ பாரு... 1940ஆம் ஆண்டுகளில், நம்ம கே.பி.சுந்தராம்பாள் ‘நந்தனார்’ படத்துக்காக ஒரு லட்ச ரூபா வாங்கினதா... நான் கேள்விப்பட்டிருக்கேன். அந்தப் பணம் இன்னைக்கு ஐந்து கோடிக்குச் சமமாம்’’ என்று தனக்குத் தெரிந்த தகவலைச் சொன்னார், உடன் வந்த பேராசிரியர். அதற்குள் படம் முடிய, பக்கத்திலிருந்து உணவகத்துக்குச் சென்றோம்.

வட்டவடிவமான பளிங்கு மேடையில் அமர்ந்து உணவுப்பட்டியலை வாசிக்கத் தொடங்கினோம். அந்த உணவுப் பட்டியலில் மருந்துக்குக்கூட தமிழ் எழுத்து இல்லை.

என்னோடு வந்த மாணவர் மிகுந்த ஆர்வத்துடன் அந்தப் பட்டியலை வாசித்து, அதன் கடைசிப் பக்கத்தில் கடைசியாக இருந்த ஒரு பெயரைச் சுட்டிக்காட்டி, ‘‘இது சாப்பிடுவோமா? ‘ரெயின்போ’ பேரே புதிதாக இருக்கிறது! சுவையும் செம டேஸ்டா இருக்கும்ல’’ என்றுற நண்பனைக் கேட்க, ‘‘அது இந்த அட்டையை அடிச்ச பிரஸ் நேம்டா... ‘ரெயின்போ பிரஸ்’ - நல்ல வேளை இதை எங்கிட்டக் கேட்ட, சர்வர் கிட்ட கேட்டிருந்தே மானம் போயிருக்கும்’ என்று கோபமாகச் சொல்ல, நாங்கள் பலமாகச் சிரித்துவிட்டோம்.

உணவுவகைகளின் தமிழ்ப் பெயர்களை சர்வரிடமே கேட்டு, அதையே கொண்டுவருமாறு சொல்லிவிட்டுப் பேச்சைத் தொடர்ந்தோம். ‘‘இன்னிக்கு நம்ம சினிமா உலகத்தில் முதல்தரக் கதாநாயகர்கள் ஐந்து கோடி முதல் பத்து கோடி வரை சம்பளம் வாங்குகிறார்களாமே’’




சிரிப்போம் ஜெயிப்போம்!

# ‘‘நடிப்புத்தான் எனக்குப்பிடிச்ச தொழிலு...’’

கு.ஞானசம்பந்தன்

என்று அந்த மாணவர் தொடர்ந்தார்.

''அட போப்பா, டைரக்டர்களே இரண்டு கோடி வாங்கும்போது அவங்க வாங்குறதில என்ன ஆச்சரியம்! ம்... நம்ம சம்பளம் இப்பத்தான் கூடியிருக்கு'' என்று பேராசிரிய நண்பர் சொல்ல, 'ஐயா நான் ரொம்பநாளாகக் கேட்கணும்னு இருந் தேன். பள்ளிக்கூட, கல்லூரி மாணவர் களை, இளைஞர்களை நீங்கள் எதிர் காலத்தில் டாக்டராக வரவேண்டும், பொறியாளராக வரவேண்டும், விஞ்ஞானி ஆகவேண்டும், கலெக்டராக முன்னுக்கு வரவேண்டும்... என்றெல்லாம் வாழ்த்திப் பேசுகிறீர்களே... ஏன், நீ ஒரு சூப்பர் ஸ்டா ராக வரவேண்டும், ஆஸ்கார்நாயகனாக வரவேண்டும், புகழ்மிக்க இயக்குநராக வரவேண்டும் என்று யாரையும் வாழ்த்து வதில்லை?'' என்று சற்று ஆதங்கத்துடன் கேட்டான் என் மாணவன்.

நான் சற்று திடுக்கிட்டுப் போனேன்.

அதற்குள் சூடாக மிளகு சூப் வரவே... பேச்சு சற்றே தடைப்பட்டு விடைபெற்றது.

''நண்பர்களே... நீங்கள் கேட்ட கேள்விக்கான விடையைச் சொல் கிறேன் கேளுங்கள். இளைஞர்களின் சுய முன்னேற்றம், தன்னம்பிக்கை, எதிர்காலத் துக்கு வழி காட்டல் என்ற வகையில் ஆயிரக்கணக்கான மாணவ மாணவியர் பங்கேற்ற கூட்டத்தில் நானும், மாவட்ட ஆட்சித் தலைவர் ஒருவரும். வேலை வாய்ப்பு அலுவலக அதிகாரி ஒருவரும் கலந்து கொண்டோம். கலந்துரையாடலின் போது, நீங்கள் கேட்ட கேள்வி அங்கு கேட்கப்பட்டது. அப்போது அந்த மாவட்ட ஆட்சித் தலைவர், பதில் கூறத் தொடங்கினார். அவர் இந்திய ஆட்சிப் பணித் தேர்வில் அதாவது ஐ.ஏ.எஸ். தேர்வில் தங்கமெடல் பெற்றவர்.

'நண்பர்களே! தமிழ் சினிமாவின் இன் றைய வயது தெரியுமா?' என்று அவர் கேட்டார்.

'75 ஆண்டுகளுக்கு மேல் சார்! ஏனென்



**புகழும், பணமும் அருவியாய்க் கொட்டும் திரையுலகிலும், விளையாட்டுத் துறையிலும் ஒருவன் ஜெயித்துவர லட்சம் பேர் பின்னுக்குத் தள்ளப்படுகிறார்கள்.**

றால் முதல் பேசும்படம் 1931-ல் தமிழில் வெளிவந்தது' என ஒரு மாணவன் புள்ளி விவரம் கொடுத்தான்.

'நன்றி. பேசாத ஊமைப்படத்தின் காலத்திலிருந்துக்கூடக் கணக்கிட்டாலும் நூறாண்டுகள் ஆகியிருக்கலாம். இந்த நூற்றாண்டு கண்ட சினிமா உலகத்தில் நீங்கள் சொன்ன சூப்பர்ஸ்டார்கள் எத்தனை பேர் கணக்கிடுங்கள்' என்று சொன்னார்.

'அந்தக் கால சூப்பர் ஸ்டார் தியாகராஜ பாகவதர், பி.யு.சின்னப்பா' என்று நான் சொல்ல...

'எம்.ஜி.ஆர்., சிவாஜி' என்று இன்னொரு பெரியவர் சொல்ல,

'ரஜினி, கமல்' என்று இளைஞர்கள் கத்த, 'அஜித், விஜய்' என்று பெண்கள் சந்தோஷக் கூச்சலிட, எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த மாவட்ட ஆட்சியர், இவர்களோடு, 'கனவுக்கன்னி களையும் நடிகையர் திலகங்களையும் சேர்த்துக் கொள்ளுங்கள்... ஐம்பது பேர் வருவார்களா? நூற்றாண்டு சினிமாவில் ஐம்பது பேர்களே முன்னுக்கு வந்தவர்களாக நமக்குத் தெரிகிறார்கள்.

இதே, கனவுத் தொழிற்சாலையான சினிமா உலகில், வாய்ப்பு கிடைக்காதவர்கள், வறுமையில் வாடியவர்கள், தற்கொலைக்கு ஆளானவர்கள் எத்தனை எத்தனை பேர் தெரியுமா?

இதுமட்டுமில்லை... நீங்கள் அடிப்படைக் கல்வியான +2, பி.ஏ. என ஏதாவது படித்து முடித்திருந்தால் உயரப்போவதற்கு வாய்ப்பு உண்டு. இல்லாவிட்டாலும் சறுக்கல் இடையாது. கல்வித் தரத்துக்கு ஏற்றவேலை. கவலையில்லாத வாழ்க்கை.

தம்பிகளா... புகழும், பணமும் அருவியாய்க் கொட்டும் திரையுலகிலும், விளையாட்டுத் துறையிலும் ஒருவன் ஜெயித்துவர லட்சம் பேர் பின்னுக்குத் தள்ளப்படுகிறார்கள். ஆனால், மற்றைய துறைகளில் அப்படியில்லை. அரசுப்பணியிலும், டாக்டர், பொறியாளர், வக்கீல் பணியிலும் பணிஓய்வுக்குப் பின்பும் வாய்ப்புகள் உண்டு.

குறைந்தபட்சம் பென்ஷனாவது கிடைக்கும். ஒரு படம் ஓடாவிட்டால், ஒரு பந்தயத்தில் தோற்றால் அவர்களின் நிலை என்ன?

ஒலிம்பிக்கில் பதக்கம் பெற்ற ஒரு குத்துச் சண்டை வீரனின் கடைசிக் காலமும், அவன் அனாதைப் பிணமாக அடக்கம் செய்யப்படுவதையும் 'நாக் அவுட்' என்ற குறும்படத்தின் மூலம் வெளிப்படுத்தினார் இயக்குநர் லெனின். அதனால்தான் எங்களின் ஆசீர்வாதம் உங்களின் நிலையான எதிர்காலம் நோக்கியதாக இருக்கிறது' என்று அவர் முடித்தார்'' என நான் சொன்னபோது, என் மாணவர்கள் சற்று மிரண்டுபோனார்கள்.

உணவு கொண்டு வந்த சர்வார், ''சார் நான்கூடக் கதாநாயகனாக வாய்ப்பு தேடித்தான் வந்தேன். பன்னிரண்டு வருஷமா சர்வரா இருக்கேன்'' என்று ஏக்கத்தோடு சொன்னார். ''ஏன்ப்பா, உங்க கடை முதலாளிபோல நீயும் உழைத்து ஹோட்டல் வைத்திருக்கலாமே'' என்று நான் கேட்க,

''அட போங்க ஸார்... அவரே சொத்தெல்லாம் வித்து, கண்மணியே பொன்மணியே... காதலா சாதலா... அப்படின்னு ரெண்டு படம் எடுத்து, ஓடாம நடுத்தெருவுக்கு வந்து, இப்ப இப்படி இருக்காரு தெரியுமா?'' என்று சர்வர் சொல்ல,

நாங்கள் வாய்விட்டுச் சிரித்தோம்.

(தொடரும்)

"மன்னா இளவரசருக்கு சீக்கிரம் திருமணம் செய்வது நல்லதென்று நினைக்கிறேன்.."

"ஏன் அமைச்சரே..?"

"அடுத்த மகாராணி நீதான் என்று நிறைய பெண்களிடம் சத்தியம் செய்து கொண்டிருக்கிறாராம்.."



"போருக்குப் போவதற்கு முன் நம் படை வீரர்கள் வயிறு வலிக்கச் சிரித்து மகிழ்ந்தார்களாமே ஏன்?"

"மன்னர் வீர உரை ஆற்றினார்.."



# “நீதான் அடுத்த மகாராணி!”

“வில்லை உடைக்கிறவருக்கு இளவரசியைக் கட்டித்தர்றதா மன்னர் அறிவிச்சிருந்தாரே என்னாச்சு?”

“இளவரசியை நேர்ல பார்த்ததும் வில்லை உடைக்க முடியாத மாதிரி பாவ்லா பண்ணிட்டு எல்லா இளவரசர்களும் எஸ்கேப் ஆயிட்டாங்களாம்..”

பிரியதர்ஷன்



# நீங்கள் கேட்டவை

● மஞ்சுதேவன், அமிரோலி

? சிங்கப்பூரிலிருந்து பருப்பு இறக்குமதியாகும் நிலைக்கு நமது நாடு தள்ளப்பட்டுள்ளது பற்றி?

! சிங்கப்பூரில் பருப்பு விளைவிக்க பூமி ஏது? பிற நாடுகளிடமிருந்து வாங்கி வைத்துள்ளதை, நமக்குக் கூடுதல் விலைக்கு விற்பார்கள்; நாமோ, விவசாய நாடாக, ஏராளமான விளை நிலங்கள் இருந்தும் வழிகாட்டல் இல்லாததால், பஞ்சம் பிழைப்பவர்களாகியிருக்கிறோம்!

● நெல்லை. த. ஞானசெல்வன், பிரியம்மாள்புரம்

? கொசுத்தொல்லை ஆரம்பித்து விட்டதே?

! அது எப்போது நின்றது, ஆரம்பிக்க?

● மு.பெரியசாமி, விட்டுக்கட்டி

? இந்தியாவுக்கு எதிராகப் பயன்படுத்துவதற்காக பாகிஸ்தான் அணு ஆயுதங்களைக் குவித்து வருவதாக அமெரிக்கா சொல்கிறதே?

! கண் கெட்ட பிறகும் புத்தி வராமல், புதிய ஆயுதங்களை விற்க ஒப்பந்தம் போட்டுள்ளது அமெரிக்கா! நமது அயலுறவுத்துறை... ஊஹூம், அசைந்து கொடுக்காதே!

● ஜி.இந்திரா, பெங்களூரு

? "பதவிக்காக நான் கட்சி மாறவில்லை. பெண்களுக்கு இட ஒதுக்கீடு வழங்கியது காங்கிரஸ்தான். எனவேதான் அதில் சேர்கிறேன்" என்கிறாரே ரோஜா?

! முள்ளில்லாத ரோஜாவா? நடிப்பில்லாத அரசியலா? ஸ்டார்ட், கேமரா, ஆக்‌ஷன்!



● திருமண சித்தாந்தம்!

## திருமணம்

● எல்.மோகனசுந்தரி, கிருஷ்ணகிரி

? கருணாநிதிக்கு 'பாரத ரத்னா' விருது வழங்க வேண்டும் என்று தி.மு.க. மகளிர் அமைப்புகள் கோரிக்கை வைத்துள்ளனவே?

! கோருவது அவர்களது உரிமை எனினும், கோராமலே அளிக்கப்பட்டால்தான் பெருமை.

# தராசு



* விருது கோரிக்கை!



* வழிபாடு அரசியல்

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு

? "பெரும்பாலான திருமணங்கள் தோல்வியில் முடிகின்றன; எனவே திருமணமே இனி தேவையில்லை" என்கிறாரே கமல் ஹாசன்?

! உலகெங்கும் பெரும்பாலான திருமணங்கள் தோல்வி அடைவதில்லை என்பதே உண்மை. தனிப்பட்ட அனுபவங்களின் அடிப்படையில் பொதுக் கோட்பாடுகளை உருவாக்கக்கூடாது. அதனால் சமுதாயம் சீரழியும்.

● செல்.பச்சமுத்து, வ.களத்தூர்

? இயற்கை நம்மைத் தண்டிப்பது எதனால்? அது நியாயமா?

! Action-reaction அடிப்படையில்தான்! இயற்கையை நாம் பலவிதமாக கொடுமைப்படுத்துவதால், இயற்கையும் தடம் மாறி நம்மைத் தண்டிக்கிறது. சற்று நேரம் சிந்தித்தால், இயற்கைக்கு நாம் எவ்வளவு தொந்தரவு தருகிறோம் என்பது பட்டியலாக விரியும்.

# தேவையில்லை என்கிறாரே கமல்?

● இரா.சக்கரபாணி, மதுரை

? நான்காயிரம் சம்பளம் பெறுகிற சத்துணவு, அங்கன்வாடி, பால்வாடி ஊழியர்களுக்கு ஊதிய உயர்வு வழங்க தமிழக அரசு மறுத்து வருகிற நிலையில், நாற்பதாயிரம்வரை சம்பளம் பெறுகிற கல்லூரி ஆசிரியர் மற்றும் பேராசிரியர்களுக்கு ஆறாயிரம் முதல் பதினாறாயிரம் வரை அள்ளிக் கொடுத்துள்ள ரகசியம் என்ன?

! பால்வாடி ஊழியர்களிடம் நமக்கு அனுதாபம் உண்டு. எனினும், ஊதிய நிர்ணயம் என்பது வேலையின் தன்மை, வேலை செய்கிற நேரம், நிறுவனம்/அமைப்பின் பொருளாதார சக்தி போன்ற பல அம்சங்களைக் கருத்தில்கொண்டு நிர்ணயிக்கப்படுகிறது. பால்வாடி ஊழியர்களையும் பேராசிரியர்களையும் ஒப்பிடுவது சரியல்ல.

● மு.அப்துல் அஜீஸ், ஆரோவில்

? ஆந்திர முதல்வர் விபத்தில் இறந்த அதிர்ச்சியினால் 142 பேர் இறந்திருப்பது குறித்து?

! தனிநபர் வழிபாடு என்பது இத்தகைய அவலங்களையே உருவாக்கும். இந்த நிகழ்விலிருந்து பாடம் கற்றேனும் அரசியல் கட்சிகள் உட்கட்சி ஜனநாயகத்தை அடிமட்டத்திலிருந்து உருவாக்கட்டும்.

● எஸ்.ஏ.கேசவன், கோவில்பட்டி

? பத்திரிகைத் துறையை ஏன் ஜனநாயகத்தின் நான்காவது தூண் என்று சொல்

கிறார்கள்?

! மூன்று முக்கியமான காரணங்கள் உண்டு. செய்திகளை நிறைய கொடுத்து, மக்களின் தகவல் அறியும் உரிமைக்கு உதவுவது ஒன்று; நடுநிலை விமர்சனப் பார்வை மூலம் அவர்களது விழிப்புணர்வைப் பெருக்குவது இரண்டு; மக்களின் கருத்துக்களைப் பிரதிபலித்து, ஆட்சியாளர்களுக்கு மக்கள் மனநிலையைப் புரிய வைப்பது மூன்று.

● தவமணி பெரியசாமி, தேளூர்

? புகையிலை அடங்கிய பொருட்களில் எச்சரிக்கை சின்னம் (மண்டை ஓடு) அச்சிடப்பட்டுள்ளதே... இதனால் அதனைப் பயன்படுத்துவோர் குறைந்துவிட்டார்களா?

! அரச மரத்தைச் சுற்றி வந்ததும் அடிவயிற்றைத் தொட்டுப் பார்த்தால் எப்படி? இந்த எச்சரிக்கைச் சின்னம், ஏற்கெனவே புகையிலைக்கு அடிமையானவர்களைச் சுலபத்தில் மாற்றிவிடாது. ஆனால், புதிதாக அதனை நாடுவோருக்கு நிச்சயம் ஒரு மனத் தடையை ஏற்படுத்த வல்லது. கல்வி இல்லாததால், பெரும்பாலான புகையிலை உபயோகிப்பாளர்களுக்கு அதன் தீய விளைவுகள் பற்றித் தெரியாது. ஆகவேதான் இந்த எச்சரிக்கைச் சின்னம் அத்தியாவசியமாகிறது. கூடுதலாக, பல்வேறு விதங்களில் புகையிலை எதிர்ப்புப் பிரசாரத்தையும் அரசு மேற்கொள்வது நலம் தரும்.



* ஆக்ஷன் ஆரம்பம்!



* கிழிக்கப்பட்ட தேதிகள்



* ஆயுத அபாயம்!

❑ ரூ. 150 பரிசு பெறுபவர்: செல்.பச்சமுத்து, வ.களத்தூர்
* ரூ 75 பரிசு பெறுபவர்: எஸ்.ஏ.கேசவன், கோவில்பட்டி

● சரா.ஏ.முரளி, கள்ளக்குறிச்சி

? பிரதமர் தலைமையிலான கூட்டணி அரசு இரண்டாவது முறையாக ஆட்சிக்கு வந்து, நூறு நாட்களை நிறைவு செய்துள்ளதே - இதுபற்றி...?

! நாடெங்கும் தினக் காலண்டர்களில் நூறுதாள்கள் கிழிக்கப்பட்டுள்ளன!

● கல்யாணி பாலு, புதுக்கோட்டை

? ''ஒட்டுமொத்த சமுதாயமும் முன்னேறும்வரை இலவசங்கள் தொடரும்'' என்கிறாரே முதல்வர்? அப்படி முன்னேறிவிடக்கூடாது என்றுதானே 'இலவச அரசியல்' நடத்தப்படுகிறது?

! ஒட்டுமொத்த சமுதாயம் முன்னேறிவிடக்கூடாது என்பதைக் காட்டிலும், இலவசங்களை விநியோகிப்பதன் மூலம் பெருகக்கூடிய வோட்டு எண்ணிக்கையே இறுதி இலக்காக இருக்கிறது. இதுவே ஆட்சியாளர்களின் பார்வையைத் திசை திருப்புகிறது. ○

## வாவ் வாசகர்

# கல்கி டானிக்!

"கல்கி பத்திரிகை தொடங்கும்போது, உங்க பத்திரிகையோட நோக்கம் என்னன்னு கேட்டிருக்காங்க. 'தேச நலன், தேச நலன், தேச நலன்'னு மூணு தடவை சொல்லியிருக்காரு அமரர் கல்கி. பத்து வருஷத்துக்கு முன்பு, கோவையில் நடந்த அமரர் கல்கி நூற்றாண்டு விழாவில் கல்கி ராஜேந்திரன், இதைக் குறிப்பிட்டுப் பேசினார். அன்றிலிருந்து கல்கி நான் படிக்கும் உற்சாக டானிக் ஆகிவிட்டது!" என்கிறார் பதினைந்து வருட கல்கி வாசகர் கோவை எஸ்.செந்தில்குமார்.

"கல்லூரி நாட்கள்ல சமூகப் பணிகள் மீது லேசான ஆர்வமும், ஈடுபாடும் கொண்டிருந்தேன். அப்போது கல்கியில், நூறு தடவைக்கு மேலாக ரத்த தானம் செய்திருப்பவர் குறித்து கட்டுரை ஒன்று வெளியாகி இருந்தது. வருடத்துக்கு எப்போதோ ஒருமுறை ரத்ததானம் தந்து கொண்டிருந்த என்னை, மூன்று மாதங்களுக்கு ஒருமுறை வழக்கமாக ரத்தம் தந்து வருமளவுக்கு மாற்றியதும் கல்கிதான்.

பின் ஜீவன் சாரிட்டபிள் டிரஸ்ட் உருவானது. என் வயதையொத்த நண்பர்களும், இளைஞர்களும் சேவை மனப்பான்மையுடன் அதில் வந்து இணைந்தனர். எங்கள் அமைப்பில் இதுவரை ஐந்தாயிரம் பேர் தங்களை ரத்த தான சேவகர்களாகப் பதிவு செய்து செயல்பட்டு வருகின்றனர்.

எங்கள் இளைஞர் குழு கோவையில், பலதரப்பட்ட சமூக சேவைகளில் ஈடுபட்டுச் செயலாற்றி வருகிறது. கோவை மாவட்ட சிறந்த இளைஞர் விருது, ஒரு முறை பெற்றுள்ளேன். டாக்டர் அப்துல் கலாம் (2008) கரங்களினால் கேபி அவார்டு, எங்களின் ஜீவன் சாரிட்டபிள் டிரஸ்ட்டுக்குக் கிடைத்துள்ளது. சிறந்த தேசிய இளைஞர் விருதுக்காக, இந்த வருடம் கோவை மாவட்ட நிர்வாகத்தினால் மத்திய அரசுக்குப் பரிந்துரை செய்யப்பட்டுள்ளேன்!" எனக் கூறும் எஸ்.செந்தில்குமாருக்குப் பக்கபலம் இவரது குடும்பம்தானாம். மனைவி சுப்பு, எட்டு வயதில் மகள் தேஜஸ்வி. பேத்தியிடமும் மகளிடமும் தீராத அன்பு செலுத்த வேண்டுமென்றே வீட்டில் தங்கி விட்ட மாமியார் - இதுதான் செந்தில்குமார் குடும்பம். "என் மனைவி சுப்பு, இலக்கிய ஆர்வம் மிகுந்தவர். புத்தக வாசிப்பும் சமூக நேசிப்பும் என் மனைவிக்கு அதிகம். என்னுடைய சமூக சேவைப் பணிகளுக்கு ஊக்கம் தருவது அவர்தான்" என்கிறார் செந்தில்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



**நா**கர்கோவிலில் குறைந்த காற்றழுத்த மண்டலமாக உருவான ராகுல் புயல், மூன்று நாட்கள் தமிழகத்தில் சுற்றியடித்து கோவையில் 'கரையைக் கடந்திருக்கிறது'. கடந்த நாற்பது வருடங்களாக தமிழகத்தை ஆளும் வாய்ப்பை இழந்த காங்கிரஸ், கோஷ்டிப் பூசலில் சிக்கிப் புரையோடிப் போயிருக்கிறது. கட்சிக்குள்ளேயே, கட்சி கட்டும் ஸீனியர் தலைவர்களை இனி நம்பிப் பயனில்லை என்று களத்தில் குதித்துவிட்டார் ராகுல்.

காங்கிரஸ் ஆதரவு வோட்டு பதினைந்து சதவிகிதத்திலிருந்து ஐந்தாறு சதவிகிதத்துக்கு இறங்கிவிட்டது. இந்த நிலை மாறி இனி 'காமராஜ் ஆட்சி' என்ற கனவு மெய்ப்பட வேண்டுமானால் இளைஞர்கள் மூலமாகவே அது நடக்க முடியும் என்று அவர்களை டார்கெட்டாக வைத்துச் செயல்பட வழிகாட்டியிருக்கிறார். ஆனால் ஒரு பக்கம் அ.தி.மு.க., 'இளைஞர்கள் இளம்பெண்கள் பாசறை' என்று அடிமட்டத்தில் இறங்கி வேலை செய்து கொண்டிருக்கிறது. மற்றொரு புறம் இளைய தலைமுறையின் கணிசமான பகுதி, விஜயகாந்த் பின்னால் அணிவகுக்கிறது. இந்த நிலையில் ராகுல் முயற்சிகள் எந்த அளவுக்கு வெற்றியைக் கொடுக்கும்?

பல்வேறு இடங்களில் பேசும்போது குறிப்பாக அவர் சொன்னது, ''இளைஞர் காங்கிரஸ் தேர்தல் நியாயமாக நடத்தப்படும். உறுப்பினர் சேர்க்கை முறையாக இருக்கும்'' என்பதுதான். உட்கட்சித் தேர்தல் என்றாலே ஒரு பெரிய கேலிக்கூத்தாக நடத்தப்படுவதுதான் காங்கிரஸில் வாடிக்கை. கட்டுக் கட்டாக உறுப்பினர் சேர்க்கைப் புத்தகங்களை, கோஷ்டிகள் வாங்கிச் செல்லும். அதில் உறுப்பினர்கள் சேர்ந்தது மாதிரி கணக்குக் காட்டி அதற்கேற்றபடி உறுப்பினர் கட்டணத்தை மொத்தமாகச் செலுத்திவிடுவார்கள். இந்த 'நடைமுறை' காரணமாக, வசதியற்ற கோஷ்டிகள் குய்யோமுறையோ என்று சவுண்ட் கொடுக்கும். விளைவு, பல சமயங்களில் தேர்தலே ரத்து செய்யப்பட்டு, 'நியமனங்கள்' தொடரும். இன்று தமிழக காங்கிரஸில் எல்லோருமே நியமனத் தலைவர்கள்தான்! இளைஞர் காங்கிரஸில் எண்பது சதவிகிதம் பேர், 35 வயதைக் கடந்தவர்கள். இளைஞர்களைக் குறிவைக்கும் ராகுல் மிகக் கவனமாக இருக்க வேண்டியது, உறுப்பினர் சேர்க்கை குறித்துத்தான்.

''போலி உறுப்பினர்கள் என்ற பேச்சுக்கே இடமில்லை'' என்கிறார் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி உறுப்பினரான சிரஞ்சீவி. ''ஒருவர் உறுப்பினராகச் சேர வேண்டுமென்றால் இருப்பிடம், வயதை நிரூபிக்கும் சான்றிதழ் மற்றும் புகைப்படம் கட்டாயம் சமர்ப்பிக்க வேண்டும். இந்தத் தேர்தலை நியாயமாக நடத்த, முன்னாள் தேர்தல் கமிஷனர்களைக் கொண்ட அமைப்பை ராகுல் கேட்டுக் கொண்டிருக்கிறார். உறுப்பினர் சேர்க்கையில் உள்ளூர் பிரமுகர்கள் ஆர்வத்துடன் ஈடுபடக் காரணம், பொறுப்பாளர்களாகத் தேர்தலில் வெற்றி பெறும் வாய்ப்பை உருவாக்கிக்



* ஞானசேகரன்





* சிரஞ்சீவி

கொள்ளத்தான். நாட்டிலேயே கட்சியின் இளைஞர் அமைப்புக்கு தேர்தல் நடத்துவது காங்கிரஸில் மட்டும்தான். குஜராத், பஞ்சாப், புதுச்சேரி ஆகிய மாநிலங்களில் தேர்தல் வெற்றிகரமாக நடத்தப்பட்டுவிட்டது. ஒன்றிய, நகர, மாவட்ட, மாநில அளவில் பத்து பேர் நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். அவர்கள் தேர்தலில் பெறும் வோட்டை வைத்துத்தான் தலைவர், துணைத் தலைவர் நியமனம். இதற்குப்பின் கோஷ்டிப் பூசலே இருக்காது'' என்கிறார் சிரஞ்சீவி.

**ச**த்தியமூர்த்தி பவனில் ராகுல் தமிழக காங்கிரஸ் பிரமுகர்களைச் சந்தித்தபோது பேசிய ஞானசேகரன், ''ஒன்று எங்களை ஒரு எதிர்க்கட்சியாகச் செயலாற்ற விடுங்கள். அல்லது ஆட்சியில் பங்கு பெற வழி செய்யுங்கள்'' என்றபோது கைதட்டல் காதைப் பிளந்தது! தமிழக காங்கிரஸின் உணர்வுகளை ராகுல் புரிந்து கொண்டிருப்பார். ஆனால், ராகுல் தமிழக காங்கிரஸ்காரர்களுக்கு உணர்த்த வேண்டியது, 'தனித்தனியாகச் செயல்படாமல் அனைவரும் ஒருங்கிணைந்து செயல்படுங்கள்' என்பதைத்தான். ''ராகுல் விஸிட் மக்களிடையே காங்கிரஸ் குறித்து ஓர் எழுச்சியை உருவாக்கியிருக்கிறது'' என்கிறார் கராத்தே தியாகராஜன்.

இதற்கிடையில் கலைஞரை, ராகுல் சந்திக்காதது தி.மு.க.வினருக்குக் கடுப்பைக் கிளப்பிவிட்டிருக்கிறது. பத்திரிகையாளர் சந்திப்பில் இது பற்றிக் கேட்டபோது, ராகுல் புத்திசாலித்தனமாக, ''கலைஞர் எங்கள் மரியாதைக்குரியவர். எங்களுக்கிடையே பிளவை உண்டாக்க வேண்டாம்'' என்று சொல்லியிருக்கிறார்.

- ப்ரியன்

# ராகுல் புயல்!

"விழித்திரை பாதிப்பு வயசானவங்களுக்கு மட்டுமில்லை. பிறந்த குழந்தைக்கும் வரும்" என்கிறார் கண் மருத்துவர் டாக்டர் வசுமதி வேதாந்தம். எதனால்? இதோ அவரே சொல்கிறார்.

# விழியே... விழி!

விழித்திரை பாதிப்பு..?

"ஒரு தாயின் கருவில் பத்து மாதம் இருந்து விட்டு இவ்வுலகுக்கு வரும் குழந்தைகளுக்கு, உடல் மற்றும் கண் வளர்ச்சி முழுமை அடைந்திருக்கும். ஆனால், பத்து மாதங்களுக்கு முன்பே ஒரு குழந்தை பிறந்துவிட்டால், அக்குழந்தையின் கண்ணில் விழித்திரை (retina) பாதிப்பு ஏற்பட வாய்ப்பு உள்ளது. இதற்குப் பெயர்தான் ரெட்டினோபதி ஆஃப் ப்ரீமெச்சூரிட்டி (Retinopathy of Prematurity). சுருக்கமாகச் சொன்னால் ROP."

குறை மாதத்தில் பிறக்கும் குழந்தைகளுக்கு மட்டும்தான் விழித்திரை பாதிக்குமா...?

"35 வாரங்களுக்குள் பிறக்கும் குழந்தைகள் மற்றும் 2 கிலோ எடைக்குக் குறைவாக பிறக்கும் குழந்தைகளுக்கு ROP ஏற்படுவதற்கான வாய்ப்புகள் அதிகம். அதே போல குழந்தையின்மைக்கென சிகிச்சை எடுத்துக் கொள்பவர்களுக்கும், இரட்டைக் குழந்தைகளும் குறை மாதத்திலேயே பிறக்கக்கூடிய சாத்தியக்கூறுகள் அதிகம். ஐந்து முதல் ஆறு லட்சங்கள் வரை செலவு செய்துவிட்டு, கர்ப்பம் தரிக்கும் தாய்மார்கள், குறை மாதத்தில் குழந்தை பிறந்துவிட்டால்

உடனடியாக அதன் விழித்திரையைப் பரிசோதனை செய்வது அவசியம்!''

**ROPயை எப்படி கண்டு பிடிப்பது?**

''மேலை நாடுகளில் 1950களிலிருந்தே இது கண்டுபிடிக்கப்பட்டுவிட்டது. குறை மாதத்தில் பிறக்கும் குழந்தைகளுக்கு நுரையீரல் சரியாக வளர்ந்திருக்காது. எனவே, ஆக்ஸிஜன் கொடுப்பார்கள். அப்படி அதிக அளவு செலுத்தப்பட்ட ஆக்ஸிஜனால் விழித்திரை பாதிப்பு ஏற்பட்டது. பிறகு ஆக்ஸிஜனை ஒரே சீராகக் கொடுக்க ஆரம்பித்தார்கள். குறை மாதத்தில் பிறக்கும் எல்லாக் குழந்தைகளும் விழித்திரை பாதிப்போடு பிறப்பதில்லை. அக்குழந்தை பிறந்து மூன்று நான்கு வாரங்களில்தான் இந்தப் பாதிப்பு தெரிய வரும்!''



* டாக்டர் வசுமதி வேதாந்தம்

**தற்காப்பு என்ன?**

''குறை மாதத்தில் ஒரு குழந்தை பிறந்துவிட்டால் 30 நாட்களுக்குள் அதற்கு கட்டாயம் ஸ்க்ரீனிங் செய்துவிட வேண்டும். இதை எக்காரணம் கொண்டு தள்ளிப் போட்டுவிடக் கூடாது. குழந்தை நல மருத்துவர் மற்றும் கண் சிகிச்சை நிபுணர்களின் பரிந்துரைகளின் பேரில் அக்குழந்தைக்கு உடனடியாக லேசர் மூலம் சிகிச்சை மேற்கொள்ள வேண்டும்.''

**குழந்தைக்கு லேசர் சிகிச்சையா?**

''பச்சிளம் குழந்தைகளுக்குத் தேவையில்லாமல் மயக்க மருந்து கொடுத்து அறுவை சிகிச்சை செய்ய வேண்டாமே. 15, 20 நிமிடங்களுக்குள் செய்து முடிக்கக்கூடிய லேசர் சிகிச்சையே அந்த விழித்திரைப் பாதிப்பைச் சரி செய்து குழந்தையின் பார்வை பறிபோகாமல் காப்பாற்றி விடும். குழந்தைக்கு விழித்திரை பாதிப்பு ஏற்பட்டிருக்கிறது என்பதைக் கண்டறிந்து 72 மணி நேரத்துக்குள் லேசர் சிகிச்சை செய்துவிட வேண்டும். தேவை இல்லாமல் காலம் தாழ்த்தினால் வேறு வழியில்லாமல் அறுவைச் சிகிச்சை செய்துதான் குழந்தையின் பார்வையைக் காப்பாற்ற வேண்டி இருக்கும்!''

**- நளினி சம்பத்குமார்**



‘‘என்னோட பேரு முருகேசன். ஆயிடுச்சு நாப்பத்தாறு வயசு. எட்டாவது படிக்கையில் வரைய ஆரம்பிச்சேன். இன்னைக்குவரைக்கும் வரைஞ்சுக்கிட்டே இருக்கேன். ஒரு சமயங்கூட சலிப்பு வந்தது இல்ல. கேமராவை எடுத்துக்கிட்டு ஊர் சுத்தப் போயிடுவேன். மனசுக்குப் பிடிச்சத 'கிளிக்' பண்ணிக்கிட்டு, அதைச் சாட்சியா வெச்சு ஓவியம் வரைவேன். போட்டோக்காரனாவும் இருக்கேன். ஓவியக்காரனாவும் இருக்கேன். எனக்கு ரெண்டுமே தொழில்தான். கஞ்சி ஊத்தினாதானே கலைக்கு மதிப்பு. என்னோட படம் 1,500லிருந்து 15,000வரை விலை போகுது. கோயமுத்தூர்லே எனக்கு நாலு சிஷ்யன்கள் உண்டு. பெரும்பாலும் யதார்த்த படம்தான் போடுவேன். யாராவது கேட்டா மட்டுமே மாடர்ன்



* முருகேசன்

# கஞ்சி ஊத்தினாதான் கலைக்கு மதிப்பு!

ஆர்ட் வரைவேன். வரையறவங்களுக்கு மட்டுமே புரிஞ்சு, பார்க்கிறவங்களுக்குப் புரியாம இருந்தாதானே மாடர்ன் ஆர்ட்? இதுவரை நாலுமுறை கண்காட்சி வெச்சுருக்கேன். என்னோட படங்கள் சீக்கிரம் வெளுக்காம பல வருஷங்கள் பளிச்னு இருக்கும். ஏன்னா நான் வெளிநாட்டு பெயின்ட் பயன்படுத்துறேன். பந்தா இல்லாம இயல்பா இருக்கணும் ஸார். நாம எப்படியோ அப்படித்தானே நம்ம படைப்பும்...''



\- அமிர்தா

படங்கள்: சின்னராஜ்



# பிரசாதமும்... pressசாதமும்..!

"ஒருநாள் கார்ட்டூனிஸ்ட் மதன், 'ஆனந்த விகடனில் நீங்க ஒரு நகைச்சுவை சரித்திரத் தொடர்கதை எழுதுங்களேன்' என்று கேட்டபோது, பதறிப்போன நான், 'எனக்குச் சரித்திரம் எல்லாம் தெரியாதே?' என்று சொன்னேன். 'உங்களுக்குச் சரித்திரத்துல என்னதான் தெரியும்?' என்று அவர் கேட்க, 'சோழ நாட்டை ஆண்டது சோழர்கள்; பாண்டிய நாட்டை ஆண்டது பாண்டியர்கள்; சேர நாட்டை ஆண்டது சேரர்கள்; அவ்வளவுதான் தெரியும்' என்றேன். உடனே, 'ஓ! இவ்வளவு தெரியுமா? இதை வைத்துக்கொண்டு தாராளமாக நீங்க சரித்திரக் கதை எழுதலாம்' என்றார். அப்

# கிரேஸி ட்ரீட் - வாசகர் திருவிழா

# 125வது வாரக் கொண்டாட்டம்




✱ விழா மேடையில்...

"தமிழ்ப் பத்திரிகை உலகில் நாவல், சிறுகதைகள் போல கேள்வி பதிலுக்கும் ஒரு தனி இலக்கிய அந்தஸ்து உண்டு. தமிழில் வாசகர்களின் கேள்விகளுக்கு பதில் அளிப்பதில் முன்னோடிகள் என்று அமரர் கி.வா.ஜ, அரசு, சாவி, சோ... ஆகி யோரைக் குறிப்பிடலாம். ஆன்மிக வினாக் களுக்குச் சிறப்பாகப் பதில் அளிப்பவர் ராமகிருஷ்ண மடத்தின் சுவாமி கமலாத் மானந்தா. அந்தவகையில் இப்போது மிகச் சிறப்பாகக் கேள்வி பதில் சொல்லிக் கொண்டிருப்பவர்கள் என்று இங்கே மேடையில் அமர்ந்திருக்கும் மதன், கிரேஸி படி நான் எழுதியதுதான் கே.பி.டி. சிரிப்பு ராஜசோழன்' - கல்கி நடத்திய கிரேஸி டீரீட் விழாவில் கிரேஸி மோகன் சொன்னபோது மொத்த பார்வையாளர் களுமே சிரிப்பு ராஜ சோழன்களாகிப் போனார்கள்.

சென்னை தி.நகர் ராமாராவ் கலா மண்டபமே விழாக்கோலம் பூண்டிருந்தது. கிரேஸி மோகன் தொடர்ந்து 125 வாரங் களுக்கு மேலாக கல்கி இதழில் வாசகர் களின் கேள்விகளுக்குப் பதில் அளித்து வருவதைக் கொண்டாடும் வகையில், கல்கி நிறுவனம் கடந்த ஞாயிறன்று (6.9.09), 'கிரேஸி டீரீட் - வாசகர்கள் திருவிழா'வுக்கு ஏற்பாடு செய்திருந்தது. கிரேஸியின் சூப்பர் டூப்பர் ஹிட் சாக்லேட் கிருஷ்ணா நாட கத்தை வாசகர்களுக்காகப் பிரத்யேகமாக மேடையேற்றினார் கிரேஸியார்! பாராட்டு விழா தொடர்ந்தது.

## Live வாசகர் கேள்விகளும்... கிரேஸியின் பதில்களும்...



ஹாங்காங்கில் நாடகம் போடச் சென்றி ருந்த சமயம், லைவ் கேள்வி பதில் நிகழ்ச்சி நடைபெற்றது. அங்கே ஒருவர், "நீங்கள் Ghost writing எழுதுவீங்களா?" என்று கேட்டார். அதற்கு நான் சொன்ன பதில் "செத்தாலும் எழுதமாட் டேன்" (அரங்கத்தில் சிரிப் பலை - ஹாங்காங்கில் மட்டுமில்லை, இங்கேயும்தான்) என்று சென்னை பாலசுப்ரமணியத்தின் கேள்விக்கு பதில் கூற, களை கட்டியது லைவ் நிகழ்ச்சி.

**கமல் படத்துக்கு நீங்கள் எழுதிய வசனத்தில் உங்களுக்கு மிகவும் பிடித்தது?**

'அவ்வை ஷண்முகி'யில் மீனா - கமலை டைவர்ஸ் செய்தபிறகு கமலும் அவருடைய குழந்தையும் கோயிலில் இருப்பார்கள்.


* சாக்லேட் கிருஷ்ணா நாடகம்

மோகன் இருவரையும் குறிப்பிட லாம்!'' என்று வாழ்த்திய அமுதசுரபி ஆசிரியர் திருப்பூர் கிருஷ்ணன், கிரேஸி மோகனின் கேள்வி பதில்களைத் தொகுத்துத் தனி புத்தகமாக வெளியிட வேண்டும் என்றும் ஒரு வேண்டுகோளை வைத்தார். விரைவில் கல்கி நிறுவனமே கிரேஸியின் கேள்வி-பதில்களைத் தொகுத்து புத்தகமாக வெளியிடும் என்ற மகிழ்ச்சிகரமான அறிவிப்பினை, பலத்த கைத் தட்டல்களுக்கு மத்தியில் தந்தார் ஆசிரியர் சீதா ரவி.

ஆனந்தவிகடனில் கார்ட்டூனிஸ்டாகச் சேருவதற்கு முன்னால் சுமார் ஒரு வருட காலம் கல்கியில் கார்ட்டூன்கள் போட்டதை நெகிழ்வுடன் நினைவு









குழந்தை பிள்ளையாரிடம் வேண்டிக் கொள்ளும்.

"என்ன வேண்டிக்கிறே?" என கமல் குழந்தையைக் கேட்பார்.

அப்போது வரும் வசனம்:

குழந்தை: என்னை ஔவையார் மாதிரி வயசானவளா ஆக்கிடுன்னு வேண்டிக்கறேன்.

கமல்: ஔவையார் மாதிரி ஆயிட்டா உனக்குக் கல்யாணமே ஆகாதே!

குழந்தை: டைவர்ஸும் ஆகாதே!

***சாக்லேட் கிருஷ்ணா மாதிரி 'பிஸ்கட் ராமா'ன்னு ஒரு டிராமா போடுவீங்களா?***

பிஸ்கட் ராமா, கமர்கட் கந்தன்னு வரிசையா கேட்டுக் கிட்டே இருப்பீங்களே! (மீண்டும் பலத்த சிரிப்பு - அநேகமாக எல்லா பதில்களுக்கும் அரங்கில் பலத்த சிரிப்பலை எழுந்ததால், ஒவ்வொரு பதிலையும் அடுத்து 'அரங்கத்தில் கைத்தட்டல் சிரிப்பலை' என்று சேர்த்துப் படித்துக் கொள்ளவும்.)

***நீங்கள் அரசியல் கேள்விகளைத் தவிர்த்து விடுவது ஏன்?***

அவங்களோட போட்டி போடற அளவுக்கு எனக்கு நகைச்சுவை வராது.

***உலகின் முதல் கேள்வி என்னவாக இருக்கும்?***

ஆதாம் கேட்ட கேள்வியாகத்தான் இருக்கும். அதுக்கு அப்புறம் ஆதாம் கேள்வியே கேட்கலை.



★ ரசிக்கும் வாசகர்கள்...

**கடவுளை உணர்தல் என்றால் என்ன?**

நாம் அனுபவிக்கிற சந்தோஷங்கள் எல்லாமே, நமக்குள்ளே இருக்கும் சந்தோஷத்தின் வெளிப்பாடுதான். இந்தச் சின்னச் சின்னச் சந்தோஷங்கள் எல்லாமே நாம் அனுபவிக்க வேண்டிய பெரிய சந்தோஷத்தை ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கின்றன. அந்தப் பெரிய சந்தோஷம்தான் கடவுளை உணர்தல்.

**கோழியிலிருந்து முட்டை வந்ததா... முட்டையிலிருந்து கோழி வந்ததா?**

கோழிதான் முன்னால; முட்டை பின்னாலதான் வந்தது.

**கிரேஸி மோகன் நாடகம்... மைனஸ் மாது - எப்படி இருக்கும்?**

என்னைப் பொறுத்தவரை 'தம்பியுடையான் நாடகத்துக்கு அஞ்சான்' என்றே சொல்லலாம். கமல்கூட 'அவ்வை ஷண்முகி', 'பஞ்ச தந்திரம்' ஆகிய படங்களில் நடிக்கக் கூப்பிட்டார். ஆனால், மாது மறுத்துவிட்டார். காரணம், சினிமாவுக்குப் போய்விட்டால், நாடகத்தில் நடிக்க முடியாமல் போய்விடும் என்பதுதான். என்னைப் பொறுத்தவரை இது பெரிய தியாகம்.

சிலபேர், 'மாது உங்க சொந்த தம்பியா?' என்று கேட்பார்கள். உண்மையில் மாது எனக்கு ஒண்ணுவிட்ட தம்பிதான். எங்க அப்பாவுக்கு முதல்ல பிறந்தது நான். அப்புறம் என் தங்கை. ஒண்ணு விட்டு பிறந்த தம்பிதான் மாது. ஆனால், என்னை ஒண்ணுலயும் விட்டுக் கொடுக்காத தம்பி.

கூர்ந்தார் எழுத்தாளர், கார்ட்டூனிஸ்ட் மதன். ''கல்கி இராஜேந்திரன் என்னை ஊக்கப்படுத்தி, வாய்ப்பளிக்காமல் இருந்திருந்தால், நான் சோர்வடைந்து கார்ட்டூனுக்கு முழுக்கு போட்டுவிட்டு, வேறு வேலை தேடிக் கொண்டு போயிருப்பேன்'' என்றார். கிரேஸி மோகனின் கேள்வி பதில்களுள் தாம் மிகவும் ரசித்த சிலவற்றையும் குறிப்பிட்டு வாழ்த்தினார்.

கிரேஸி டிரீட்டாக 125வது வாரத்தில் கேள்வி கேட்டிருந்த

கல்கி வாசகர்கள் அலை வரும் இந்த நிகழ்ச்சியில் கலந்து கொள்வதற்காக நேரில் வந்திருந்தது தனிச் சிறப்பு. அந்தக் குறிப்பிட்ட இதழின் கிரேஸி பதில்கள் பக்கங்களை அப்படியே மெகா சைசில் வண்ணப் பிரதி எடுத்து, அதில் இடம் பெற்றிருந்த அத்தனை வாசகர்களும் பிரதியில் கையெழுத்திட, அது கிரேஸி மோகனிடம் வழங்கப் பட்டது. கிரேஸி மோகனுக்கும், அவரது குழுவைச் சேர்ந்தவர்களுக்கும் நினைவுப் பரிசுகள் அளித்தனர் சிறப்பு விருந்தினர்கள்.



# கிரேஸி மோகன் ஏற்புரையில் சில துளிகள்

● வசனம் என்பதே கேள்வி - பதில்தான். என்னுடைய 'மேரேஜ் மேட் இன் சலூன்' நாடகத்தில் ஒரு பார்பர், டாக்டராக நடிக்க வேண்டிய சூழ்நிலை. அப்போது அவரிடம் ஹீரோயின், 'உங்களை எங்கேயோ பார்த்திருக்கேனே!' என்று சொல்வாள். இதற்கு அந்த பார்பருடைய பதிலாக என்ன எழுதலாம்னு கிட்டத்தட்ட ஆறுமணி நேரம் யோசிச்சேன். விடியற்காலையில் ஒரு வசனம் தோணிச்சு! ''என்னை நீங்க பார்த்தே இருக்க முடியாது. ஐயம் ஒன்லி ஃபார் ஜென்ட்ஸ்.'' ● எழுத்தாளர் சுஜாதாவிடம் ஒரு வாசகர், ''ஏகப்பட்ட குறள் எழுதின வள்ளுவர், ஏன் திருக்குறள்கள் என்று பன்மையில் பெயர் வைக்கவில்லை? என்று கேட்டபோது சுஜாதாவின் பதில், ''வள்ளுவருக்கு 'கள்' பிடிக்காது.'' ● சினிமாவுக்கு எழுதினா லட்சக்கணக்கில பணம் வரலாம்; டிராமாவுல ஆயிரக்கணக்கில வரலாம்; பத்திரிகையில எழுதின நூற்றுக்கணக்கில தான் வரும். ஆனாலும் குறைவா இருந்தாலும் பிரசாதம். அதாவது Pressசாதம். கல்கியில் கேள்வி - பதில் எழுத ஆரம்பித்த பிறகு என் பணிகளுக்கு ஒரு புதிய பரிமாணம் கிடைச்சிருக்கு. 'சாக்லேட் கிருஷ்ணா' நாடகத்தைப் படைக்க தூண்டுதலாக இருந்ததே இந்தக் கேள்வி - பதில் பகுதிதான்.

தொகுப்பு: **சந்திரமௌலி**

படங்கள்: **ஸ்ரீஹரி**

✱ கிரேஸிக்குக் கௌரவம்!

சென்னை பத்மா சேஷாத்ரி பள்ளிகளின் இயக்குனரான திருமதி. ஒய்.ஜி.பார்த்தசாரதியின் கல்விக்கான வாழ்நாள் அர்ப்பணிப்பை அங்கீகரிக்கும் வகையில், அமெரிக்காவில் இருக்கும் 'சென்டர் ஃபார் எக்ஸலென்ஸ் இன் எஜுகேஷன்' என்ற அமைப்பு கௌரவித்துள்ளது. திருமதி ஒய்.ஜி.பி. இன்றைய கல்விச் சூழ்நிலை, சீர்திருத்தம், சமச்சீர் கல்வி... குறித்து நம்மோடு பேசினார்...



# சமச்சீர் கல்வி தேவைதானா?

## திருமதி ஒய்.ஜி.பி. பேட்டி

நம் கல்வி முறையில் என்ன குறைபாடு?

''பாடம் சொல்லிக் கொடுக்கிற முறைதான். ஆசிரியர்கள் மாணவர்களின் அறிவைப் பெருக்குவதற்குப் பதிலாக, தேர்வில் கேட்கப் படும் கேள்விகளுக்குப் பதில் களை மட்டும் சொல்லிக் கொடுக்கிறார்கள். மாணவர் களும் அவற்றை வெறுமே, புரிந்து கொள்ளாமல் மனப் பாடம் செய்து, பரீட்சை எழுதி, மார்க் வாங்கி, அடுத்த வகுப் புக்கோ, மேலே படிக்கவோ போகிறார்கள். இதன் காரணமாக என்ஜினீயரிங் போன்ற தொழிற் கல்வியில் சேரும் மாணவர்கள், பாடங்களைப் புரிந்துகொள்ளச் சிரமப்படு கிறார்கள். பாதியில் படிப்பை விட்டுவிடு கிறார்கள். எலெக்டிரிகல் என்ஜினீயரிங் படித்த மாணவனுக்கு, வீட்டில் ஃப்யூஸ் போனால், அதை மாற்றக் கூடத் தெரிய வில்லை. பிறகு என்ஜினீயரிங் படித்து என்ன பிரயோஜனம்?''

தேர்வு முறை மிகவும் நீர்த்துப் போய்விட்டதா?

''மாநிலக் கல்வித்துறையில் ஐந்தாம் வகுப்பு வரை பாஸ் போட்டுவிடுகிறார் கள். பத்தாம் வகுப்பிலும் பன்னிரண்டாம்

வகுப்பிலும் பொதுத் தேர்வு நடத்தப்பட்டாலும், படித்த விஷயங்களை அப்ளை செய்து விடையளிக்கும் வகையில் கேள்விகள் கேட்கப்படுவதில்லை; அவ்வளவு ஏன்? கணக்கில்கூட பாடப் புத்தகத்தில் இருக்கிற கணக்குகளை அப்படியே கேட்க வேண்டும் என எதிர்பார்க்கிறார்கள். ஒரு மாணவன் ஆண்டு முழுக்கப் படிக்கிற படிப்பை மூன்று மணி நேரப் பரீட்சையின் மூலமாக மட்டுமே சோதிப்பது தவறு. எங்கள் பள்ளியில் சில டெஸ்ட்களுக்கு மாணவர்களையே கேள்விகள் தயாரிக்கச் சொல்கிறோம்.''

**சமச்சீர் கல்வி?**

''மாநில அரசின் கல்வி, மெட்ரிகுலேஷன், ஆங்கிலோ இந்தியன் என்று பலதரப்பட்ட கல்வி முறைகளை ஒன்றாக்குவது வரவேற்கத்தக்கதுதான். மாநிலக் கல்வித்துறை பாடத் திட்டத்தை, மெட்ரிகுலேஷன் அளவுக்கு உயர்த்தினால் நல்லது. அப்படி இல்லாமல், சமச்சீராக்குகிறேன் என்று மாநில அரசின் கல்வித்துறை சிலபஸ் அளவுக்கு எல்லாவற்றையும் கொண்டு வந்துவிடக் கூடாது. நிபுணர்கள் குழுவை அமைத்து, எல்லா பாடத்திட்டங்களையும் அலசி, சிறந்ததொரு பாடத்திட்டத்தை உருவாக்க வேண்டும். அதை எல்லோரும் பின்பற்றச் செய்ய வேண்டும்.''

**செயல்முறை அடிப்படையிலான கற்பித்தலுக்கு ஆசிரியர்கள் மத்தியில் வரவேற்பில்லையே!**

''புதிய கற்பித்தல் முறையில் ஆசிரியர்களுக்குத் தக்க வகையில் பயிற்சி தர வேண்டும். அவர்களும் ஆர்வத்துடன் அந்தப் பயிற்சியை ஏற்கவேண்டும். இதற்கெல்லாம் ஆழமான ஈடுபாடு அவசியம். எப்படிப் பாடம் சொல்லிக் கொடுத்தாலும் சம்பளம் வந்து விடப்போகிறது என்ற எண்ணம் மேலோங்கி இருக்கிறது. அர்ப்பணிப்பு உணர்வுடன் வேலை பார்க்கிறவர்கள் குறைந்துவிட்டார்கள். நாற்பது, ஐம்பது குழந்தைகளுக்கு ஓர் ஆசிரியர் சொல்லிக் கொடுப்பதை விட, அவர்களை பத்து, பன்னிரண்டு சிறு குழுக்களாகப் பிரித்துப் பயிற்சி கொடுத்தால் நல்ல பலன் கிடைக்கும். ஆசிரியர்கள் மாணவர்களுக்கு நல்ல முன்னுதாரணங்களாகவும் இருக்க வேண்டும்.''

**"தற்போது ஜப்பானிலும், சீனாவிலும் ஆங்கிலம்**

**தனியார் பள்ளிகள், அரசாங்கப் பள்ளிகளின்**

**இடையில் கல்வித்தரத்தில் வித்தியாசம் மிக அதிகமாக இருக்கிறதே!**

''ஆசிரியர்களின் ஈடுபாட்டில் இருக்கும் வித்தியாசம்தான் இதற்கு முக்கியக் காரணம். தவிர, பெற்றோர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் இடையிலும் நல்ல உறவு இருக்க வேண்டும். ஆண்டு முழுவதும் மாணவர்களின் படிப்பையும், இதர நடவடிக்கைகளையும், ஈடுபாட்டையும் கவனித்து, திறமையை அளவிடும் 'இன்டர்னல் அசஸ்மென்ட்' முறையைக் கடைப்பிடிக்கலாம். பள்ளியில் முதல் மாணவன் என்பவன் மிக அதிக மார்க் எடுத்தவனாக மட்டுமில்லாமல், விளையாட்டு, பேச்சுத் திறன், இதர திறமைகள் அனைத்தையும் கணக்கில் கொண்டு 'ஆல் ரவுண்டர்' ஆக இருக்க வேண்டும்.''

**பத்தாம் வகுப்பு பொதுத்தேர்வு ரத்து?**

''தவறில்லை. மத்திய கல்வி வாரியம் பள்ளிகள் மீது நம்பிக்கை வைத்து, பொதுத் தேர்வை ரத்து செய்கிறபோது, பள்ளிகளும் மிகுந்த பொறுப்புணர்வுடன் நடந்து கொள்ளவேண்டும். அதே பள்ளியில் தொடர்ந்து படிக்க விரும்புகிறவர்களுக்குப் பிரச்னை இல்லை. வேறு பள்ளிகளில் பிளஸ் ஒன் படிக்க விரும்பினால், ஆன்லைன் தேர்வு எழுத வழி இருக்கிறதே! இது மாணவர்களுக்குத் தேர்வு டென்ஷனை வெகுவாகக் குறைக்கும். பத்தாம் வகுப்பு போல எல்லா பாடங்களையும் படிக்காமல் பிளஸ் +2வில் தாங்கள் தேர்ந்தெடுக்கும் பாடங்களை மட்டும் படிப்பது மாணவர்களுக்கு நல்லதுதானே!''



**முக்கியத்துவம் பெறும் சூழ்நிலையில், நாம் ஆங்கிலத்தை ஒதுக்கக் கூடாது"**

**தாய்மொழிதான் பயிற்று மொழியாக இருக்க வேண்டுமா?**

''அந்தந்த மாநிலத்துக்குள்ளேயே படிக்கிறவர்களுக்கு அது சரியாக இருக்கலாம். இந்தியா போன்ற பல மொழிகள் கொண்ட தேசத்தில் வேறு மாநிலங்களுக்குப் போய்ப் படிக்க வேண்டிய சூழ்நிலையில் அது பிரச்னைதானே? தற்போது ஜப்பானிலும், சீனாவிலும் ஆங்கிலம் முக்கியத்துவம் பெறும் சூழ்நிலையில், நாம் ஆங்கிலத்தை ஒதுக்கக் கூடாது!''

சந்திப்பு : **எஸ்.சந்திரமௌலி**

படம் : **ஸ்ரீஹரி**

நெட் 'ஷாட்'










காப்பாத்த முடியலேன்னாலும் கை விடக் கூடாதுன்னு நினைக்கிறவன்தான் உண்மையான நண்பன். (கதையில ஒரு 'மாரல்' வேணுமில்ல... அதான்...ஹி...ஹி...)

